# டாக்டர் பட்டங்களில் மோசடி தர்பார்கள்!




# கல்கி

KALKI
4.5.86
ரூ. 1.50

அம்மா ஜீ?

பார்லே-G!




**ஏன் 'பார்லே-G'?**

நீங்கள் விரும்பும் ஒரு பிஸ்கட்டிற்கு
இது சுருக்கமான, இனிய செல்லப் பெயர்.
அது பார்லே க்ளுகோ என்பதில் சந்தேகம் இல்லை.
உண்மையில் 'பார்லே-G' என கூறும்பொழுது
நேச உணர்வு மிகுதியாகிறது. தவிர இப்பெயரில் அடங்கி உள்ள
ஜீவனுள்ள அம்சங்கள்—ஜீவனுள்ள சத்து—சுவையான பால்,
கோதுமை மற்றும் சர்க்கரையிலிருந்து கிடைக்கிறது.
ஜீவனுள்ள வளர்ச்சி—ஊட்டச் சத்து நிரம்பிய
க்ளுகோ இதனை வழங்குகிறது.
ஜீவனுள்ள ருசி—இது நீங்கள் அறிந்ததே!

PARLE

Gluco

# இதன் செல்லப்பெயர் 'பார்லே-G'

இந்தியாவில் அதிக விற்பனையாகும் பிஸ்கட்.

சுவை மிக்க சத்துணவு.



# குஷ்வந்த்சிங் மீது குற்றச்சாட்டுகள்!

**தாம் ஆசிரியராகப் பணியாற்றி வந்த ஹிந்துஸ்தான் டைம்ஸ் நாளிதழ் பற்றியும் இல்லஸ்டிரேட்டட் வீக்லி குறித்தும் குறைகளை அடுக்கி எழுதியிருந்தார் குஷ்வந்த் சிங். அதற்கு ஹிந்துஸ்தான் டைம்ஸ் தனது தலையங்கம் ஒன்றில் அளித்துள்ள பதில் அவரைக் கிழிகிழியென்று கிழிக்கிறது!**

பியூஸாகிப்போன பல்புக்குள் சிக்குண்டு கிடப்பதாலோ என்னவோ குஷ்வந்த்சிங்கின் பார்வை என்றுமே தெளிவாக இருந்தது கிடையாது. வன்மம் நிறைந்த அந்தப் பார்வை இப்போது அவருடைய முன்னாள் முதலாளிகளான இல்லஸ்ட்ரேடட் வீக்லி ஹிந்துஸ்தான் டைம்ஸ் நிறுவனங்களின் பக்கம் திரும்பியுள்ளது. முன்பு இல்லஸ்ட்ரேடட் வீக்லியுடனும் பிறகு ஹிந்துஸ்தான் டைம்ஸுடனும் தமக்கிருந்த ஒப்பந்தம் புதுப்பிக்கப்படும் என்று அவர் எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் இரண்டு நிர்வாகங்களுமே மிக்க மரியாதையுடன் அவரை வெளியேறச் சொல்லி வாயிலைக் காண்பித்துவிட்டன என்பது சர்தாரின் குற்றச்சாட்டு. இந்த இரண்டு ஸ்தாபனங்களும் தம் பேரறிவின் துணையின்றியே உலகைச் சந்திக்கத் தீர்மானித்ததற்கான காரணங்கள் என்ன என்பதையும் தயாராக ஜோடித்து வைத்துக் கூறுகிறார் அவர்: முதல் ஸ்தாபனத்திலிருந்து அவர் வெளியேற்றப்படக் காரணமாக இருந்தவர் மொரார்ஜி தேசாய் என்றால் இரண்டாவது நிறுவனத்திலிருந்து அவர் வீட்டுக்கு அனுப்பப்படக் காரணம் பிரதமர் இந்திரா காந்தி என்கிறார். ஒன்று, கட்சி பாகுபாடு இன்றி எல்லாப் பிரதமர்களும் ஒருங்கிணைந்த அருவருப்புடன் அவருக்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்க வேண்டும்; அல்லது, பல்புச் சிறைக்குள் உட்கார்ந்திருக்கும் சர்தாருக்கு அருகே உள்ள 'பாட்டில்' தன் வழக்கமான வித்தையைக் காட்டியிருக்க வேண்டும்! தர்க்க ரீதியாக ஆராய்ந்தால், இரண்டாவது காரணமே சரியானது என்று தோன்றுகிறது!

இருப்பினும், ஹிந்துஸ்தான் டைம்ஸில் தாம் இருந்த நாட்கள் மிக ரம்மியமானவை என்று துளியும் வெட்கமின்றிக் கூறுகிறார் சர்தார். இந்த ரம்மியமும் நன்னம்பிக்கையும் முற்றிலும் ஒருதலைபட்சமானவைதாம் என்பதை அவர் உணராது போனதுதான் பரிதாபம்! ஹிந்துஸ்தான் டைம்ஸுக்கு அவர் வேலை செய்த நாட்கள் ஏன் அவருக்கு ரம்மியமாக இருந்திருக்காது? எப்போதேனும் ஒரு முறை ஆபீஸில் எட்டிப் பார்க்க வேண்டியது. மற்ற நாட்களில் ரூமன் பாதிரியார் முதல் கட்டாஃபிவரை யார் எங்கு அழைத்தாலும் மாதக் கணக்கில் போய்த் தங்க வேண்டியது. இதுபோன்ற பல பயணங்களில், கடைசி நிமிஷத்தில் தம் குடும்பத்தைச் சேர்ந்த சிலருக்கும் ஓசி டிக்கெட்டும் தங்கும் வசதியும் ஏற்பாடு செய்துதரச் சொல்லி நல்லெண்ணம் படைத்த அயல்நாட்டுத் தூதர்களைத் தர்ம சங்கடத்தில் ஆழ்த்த வேண்டியது......! இப்படி அவர் உலகமெங்கும் ஓசியில் பறந்துகொண்டு தமக்கு மிகப் பிடித்தமான 'கலர்களைப் பார்வையிடும்' பொழுது போக்கில் ஈடுபட்டிருக்கையில் சர்தாரின் கீழ் அன்று துணை ஆசிரியராகப் பணிபுரிந்தவரான இன்றைய ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியர் ஓடாக் உழைத்துக் கொண்டிருந்தார்.

சர்தார் ஊரில் இருந்தபோது மட்டும் என்ன வாழ்ந்தது என்கிறீர்கள்? அந்த இரண்டு வருடக் காலத்தில் அவர் மனமு



வந்து ஐந்து தலையங்கங்களை எழுதினார்! அவற்றைத் திருத்தி, சீர் செய்து மெருகேற்றியவர் என்னவோ அதே துணையாசிரியர்தான். இதற்காகவெல்லாம் நன்றி பாராட்டி விடுபவர் அல்ல சர்தார். தம் பதவி அந்தத் துணையாசிரியருக்குக் கொடுக்கப்பட்டுவிட்டதில் அவருக்கு எரிச்சல். இப்படிப் பொறுமைப்படுவதும் அவருடைய ஊரறிந்த குண நலன்களுள் ஒன்று! இல்லஸ்டிரேடட் வீக்லியில் எம்.வி. காமத் தமக்குப் பதிலாக நியமிக்கப்பட்டபோதும் இப்படித்தான் பல்லைக் கடித்தார்!

ஹிந்துஸ்தான் டைம்ஸில் திறமையின் அடிப்படையில் மட்டுமே வேலைக்கு ஆட்களை நியமிப்பதில்லை என்பது சர்தாரின் வாதம். இது அவர் விஷயத்தில் மட்டும் நூற்றுக்கு நூறு உண்மைதான்! தகுதி அடிப்படையில் நிச்சயமாக அவருக்கு இந்தப் பொறுப்பைக் கொடுத்திருக்க முடியாது! அரைகுறையாகப் படித்தவர்களையும் படிப்பு வாசனையே இல்லாதவர்களையும் வைத்துக் கொண்டு மாரடிக்கும் ஸ்தாபனம் ஹிந்துஸ்தான் டைம்ஸ் போல வேறு இருக்க முடியாது என்று அடித்துச் சொல்கிறார் சர்தார். இது உண்மையாக இருப்பின், அவர் எழுத்தின் இலக்கண 'சுத்தத்தையும்', மொழிப் பிரயோகத்தையும் பார்க்கையில் அவருக்கு இங்கு பணியாற்றுவதில் எந்தவிதக் கஷ்டமும் இருந்திருக்காது! ஆங்கில இலக்கியப் பேராசிரியர் ஒருவர், எஸ்.பி.சி.ஏ. போல ஆங்கில மொழி வதைக்கப்படுவதிலிருந்து காப்பாற்ற ஒரு சங்கம் இருக்குமானால் அங்கு சர்தாரைப் பற்றிப் புகார் செய்ய வேண்டியிருக்கும் என்று கூறியதில் என்ன ஆச்சரியம்?

இன்னும் ஓர் அபாரமான குணமுண்டு நம் சர்தாருக்கு: முக்கியஸ்தர்கள் யாரேனும் காலமாகிவிட்டால் அவர் தம் மீது சட்டபூர்வமான நடவடிக்கை எடுக்க முடியாது என்கிற தைரியத்தில் அவரைப் பற்றி இல்லாததையும் பொல்லாததையும் கதை கட்டி எழுதி வந்தார். இந்த விஷமத்தனத்தில் மீண்டும் மீண்டும் பெற்ற வெற்றியின் போதை தலைக்கேறியதில் உயிருடன் இருக்கும் பிரமுகர் ஒருவரையும் வன்மத்தில் தோய்த்தெடுத்த தம் பேனாவால் தாக்கிவிட்டார்!

இதைத் தொடர்ந்து வக்கீல் நோட்டீஸ் அவரைத் தேடி வந்தது. உடனே விழுந்தடித்துக் கொண்டு மன்னிப்புக் கேட்டு சரணாகதி அடைந்து விட்டார். துளியும் தன்மானம் இல்லாத இச்செயலால் ஸ்தாபனத்திற்குக் கெட்ட பெயர் ஏற்படும் என்று உணர்ந்து அவரைக் கௌரவமான முறையில் சமரசம் செய்து கொள்ள வைப்பதற்குள் நிர்வாகத்திற்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது!

பெண்களின் பின்னழகையும் முன்னழகையும் வர்ணிப்பதில் அபார தீவிரம் காட்டும் சர்தார் செய்திப் பத்திரிகைத் துறையில் தவறுதலாக நுழைந்துவிட்டார். 'பென்ட் ஹவுஸ்' அல்லது 'ப்ளே பாய்' பத்திரிகைக்கு அவர் விலை மதிப்பற்ற பொக்கிஷமாக விளங்கலாம். ஆனால் அவருடைய இந்தத் திறமைக்குச் சிறிதும் வாய்ப்பளிக்காதது செய்திப் பத்திரிகைத் துறை. அவர் ஓசியில் காரியங்களைச் சாதித்துக் கொள்ள உதவும் ஒரு சாதனமாகத்தான் தாம் ஆசிரியராக இருந்த நாளிதழைக் கருதினார். ஹிந்துஸ்தான் டைம்ஸிலிருந்து வெளியேற்றப்பட்ட அவருக்கு வேலை போய்விட்டதே என்பதைக் காட்டிலும் இந்த ஓசி வசதிகள் இனி கிடைக்காதே என்ற கவலைதான் அதிகம். அதனால்தான் தாம் வெளியேற்றப்பட்ட விதம் பற்றி குறை கூறிக் கொண்டிருக்கிறார்.

ஒரு விஷயம் மட்டும் புதிராகவே இருந்து வருகிறது. டெல்லியிலிருந்து வெளி வரும் நாளிதழ்களிலேயே மிக மோசமானது என்று அவர் கருதும் ஹிந்துஸ்தான் டைம்ஸுக்கு சர்தார் தம் வன்மம் தோய்ந்த எழுத்துக்களை ஏன் தொடர்ந்து அனுப்பிக் கொண்டு இருக்கிறார்? அப்படி அனுப்புவதால் அந்த எழுத்துக்கள் அங்கு பணியாற்றும் படிக்காத முட்டாள்களாலும், அரைகுறை அறிவாளிகளாலும் எடிட் செய்யப்பட்டுச் சீர்குலைய ஏன் சந்தர்ப்பம் அளித்து வருகிறார்? அவர் எழுதி அனுப்பும் ஊர் வம்பும் தரங்கெட்ட ஹாஸ்யமும் நிரம்பிய மசாலாவுக்குக் கணிசமான ஒரு தொகை சன்மானமாக அளிக்கப்படுகிறதே, அதுதான் காரணமாக இருக்குமோ?

## பலூன் சிகிச்சை

உடம்பு அளவுக்கு மீறிப் பருத்துவிட்டால் அளவாகச் சாப்பிட வேண்டும் 'டையட்'டில் இருக்க வேண்டும் என்று டாக்டர் சொல்கிறார். அவருக்கென்ன...... சுலபமாகச் சொல்லிவிடுகிறார்......! வயிற்றைக் காயப் போடுவது என்பது எவ்வளவு கஷ்டம்! ஒரு வேளை நாக்கைக் கட்டிப் போட்டால் அடுத்த வேளை சேர்த்து வைத்தல்லவா சாப்பிடத்தோன்றுகிறது! இதற்காகஒருசாதனத்தை அமெரிக்க டாக்டர் லாயிட் காரெனும் பர்லெவி மேரி காரெனும் சேர்ந்து கண்டுபிடித்துள்ளனர். இதை டியூப் மூலமாக வாய் வழியே வயிற்றுக்குள் செலுத்தி விடுகின்றனர். பிறகு மெல்ல, அதனுள் காற்றைப் 'பம்ப்' செய்கின்றனர். பலூன் போல் உப்பி சாதனம் மிதக்க ஆரம்பிக்கிறது. டியூபை வெளியே எடுத்துவிடலாம். பலூன் வயிற்றுக்குள் மிதந்து கொண்டிருக்கும் வரை பசி தெரிவதில்லை. சாப்பிடும் உணவின் அளவு கணிசமாக குறைகிறது. நான்கைந்து மாதங்களில் உடம்பும் இளைத்து விடுகிறது. பிறகு மறுபடி டியூபை உட்செலுத்தி பலூனிலிருந்து காற்றை வெளிப்படுத்திவிட்டு, மெல்ல வயிற்றிலிருந்து வெளியே எடுத்துவிடலாம்!

நன்றி: நியூஸ் வீக்



# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு




புதிய, அசல்,
வண்ணமயமான
பேக்கைப் பார்த்து
வாங்குவீர்.

களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூகோன்-டி: க்ளூகோஸ், விட்டமின்-டி, கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காபி அல்லது தண்ணீரிலே கலந்து அருந்த, குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்கெட்டுகளில் கிடைக்கிறது. க்ளாக்ஸோ வழங்கும் க்ளூகோன்-டி.

## க்ளூகோன்-டி ®

ஸூப்பர்ஹீரோ மிகவிரும்பும் சக்திபானம்.

GLL-2389

# லஞ்ச் டைம்



**1**

ஒரு பெரிய காரியாலயத்தின் கீழ் தளத்தின் பின்புறம் விசாலமான லஞ்ச் ரூம். நடுவே பெரிய மேஜை. சுற்றிலும் பல மடக்கு நாற்காலிகள். ஒரு மூலையில் வாஷ் பேஸின் சுவரில் ஓரிரு இயற்கைக் காட்சிப் படங்கள் மேடையின் பின்புறம் (கட்டிடத்தின் பின்புறம் திறக்கும்) கொல்லைப்புறக் கதவு. அதையும் அகலமான ஜன்னலையும் திரைச் சீலைகள் அலங்கரிக்கின்றன. மாடியிலிருந்து இறங்கி வர ஒரு மூலையில் படிக்கட்டு உள்ளது. கட்டிடத்தின் உள்ளே இருந்து அதாவது வலது இடது பக்கங்களிலிருந்து வந்து போகவும் வசதி இருக்கிறது. ஒரு பக்கத்திலிருந்து ரகுவீர் கைக்கடிகாரத்தைப் பார்த்தபடியே வருகிறான்.)

ரகுவீர்: (கைகளைப் பிசைந்து கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்தவாறே): இன்னும் காணுமே..... காணுமே.... இன்னும் அஞ்சு நிமிஷமானால் இந்தஇடம்கொத்தவால் சாவடி மாதிரி மாறிடும்...என்ன செய்யறது.... என்ன செய்யறது.....?

சுசிலா (படி இறங்கி வந்தபடியே): என்ன செய்யறது? எங்க வீட்டு வாசலிலே கீத்துப் பந்தல் போட்டு 'சுசிலா கிடைக்கும் வரை உண்ணாவிரதம்'னு பானர் எழுதிக் கட்டிடு உண்ணாவிரதம் இருக்கலாம்!



ரகு: உண்ணாவிரதமா? ஐயோ நினைச்சாலே பசிக்குமே! உங்க அப்பா அம்மா நம் கல்யாணத்துக்குப் பச்சைக் கொடி காட்ட எத்தனை நாள் பண்ணுவாங்களோ!

சுசி: ஒரு திருத்தம் பானர்ல 'சுசிலா கிடைக்கும்வரை உண்ணாவிரதம்' என்பதற்குப் பதிலாக, 'சுசிலாவுக்காகச் சாகும் வரை உண்ணாவிரதம்'னு எழுதலாம். நானும் சாப்பிடாமல் இருந்து செத்துப் போறேன்!

(கண்ணைப் புடைவைத் தலைப்பால் துடைத்துக் கொள்கிறாள்.)

ரகு: என்ன சுசிலா இது. சாகறது என்னவோ ரொம்ப கஷ்டமான, வருத்தப்பட வேண்டிய விஷயம் மாதிரி கண் கலங்கறே? இந்த நாட்டிலே வாழறதுதானே துன்பம்!

சுசி: உங்களுக்கு என்ன, எல்லாத்தையும் புரட்டிப் போட்டுக் கிண்டலாப் பேசிடுவீங்க. தோசையைத் திருப்பிப் போடலாம்; இட்லியைத் திருப்பிப் போடவா முடியும்? என் நெஞ்சு கிடந்து தவிக்கிற தவிப்பு எனக்குன்னா தெரியும்?

(நெஞ்சு விம்மித் தணிய பெருமூச்சு விடுகிறாள்.)

ரகு: எனக்கும் தெரியுது!

சுசி: (செல்லக் கோபத்துடன் வேகமாய்த் திரும்பி) நான் போறேன். ஏகப்பட்ட வேலை இருக்கு. 'ஸ்டேட்மெண்ட்டை டைப் செய்ஞ்சு முடிச்சாத்தான் இன்னிக்கு நான் வீட்டுக்குப் போகலாம்னு டைரக்டர் சொல்லிட்டார்.

ரகு: இல்லேன்னா?

சுசி: நிரந்தரமா வீட்டுக்குப் போகலாம்!

ரகு: நம்ம பிரச்னை தீரும்னா அதையும் ஒப்புக் கொள்ளலாம்.

சுசி: நம்ம பிரச்னை இதுனாலயும் தீராது; எதுனாலயும் தீராது. ஜாதி, மதம், குலம், கோத்திரம், ஜாதகம், வரதட்சணை போன்ற விஷயங்கள் உள்ளளவும், நம் போன்ற காதலர் பிரச்னையும் தீர்க்காயுசா, சிரஞ்சீவியா இருக்கும்!

ரகு: அப்பஎன்னா நம்ம கல்யாணத்துக்கு உன் பெற்றோர் சம்மதம் கிடைக்காதுன்னு சொல்றியா.....?

சுசி: அப்பாடா! ஒரு வழியா புரிஞ்சுக் கிட்டீங்களே! கிருஷ்ணா ஸ்ரீனிவாஸுக்கு ஃபோன் பண்ண வேண்டியதுதான்.

ரகு: எதுக்கு?

சுசி: வேறே எதுக்கு? மாமேதையான உங்களுக்கு டாக்டர் பட்டம் வழங்கத்தான்!

ரகு: சுசி! எனக்கு அப்பவே, நீ இந்த லஞ்ச் ரூமுக்குள் நுழைஞ்ச உடனேயே, உன் முகத்தைப் பார்த்த கணமே, நிலைமை புரிஞ்சு போச்சு. ஆனா அதை ஒப்புக் கொள்ள மனசு வரலே. அதோட உன் மனசு கஷ்டப்படக் கூடாதேங்கிறதுக்காகவும் என்னென்னவோ

பேசிக்கிட்டிருந்தேன். அது சரி, என்னதான் சொல்றுங்க, உன் பேரண்ட்ஸ்? அம்மா என்ன சொல்று? அப்பா என்ன சொல்றுர்?

சுசி: ஐயோ! அப்பாகிட்டே யார் பேசினு? பேசணும்னு நினைச்சாலே நடுக்கமாயிருக்கு. அம்மாகிட்டதான் நைஸா....

ரகு: எனக்குத் தெரியுமே! நீ அம்மாகிட்ட முதல்ல நைஸா ஐஸ் வைச்சு கவர் பண்ணிடு வே; அப்புறம் அவளை விட்டு அப்பாவையும் வளைச்சுப் போட்டுக்குவே!

சுசி: வெவ்வெவ்வே!

ரகு: அழகாத்தான் இருக்கே, அப்புறம் சொல்லு என்ன நடந்தது?

சுசி: அம்மாகிட்டே நம்ம காதல் விவ காரத்தைச் சொல்லாம....

ரகு: சொல்லவே இல்லையா? போச்சுடா...

சுசி: கொஞ்சம் குறுக்கிடாம கேளுங் களேன்.... நம்ம விஷயத்தைப் பற்றிச் சொல் லாம..... பொதுப்படையாப் பேசினேன். 'பேப்பர்லே ஒரு நியூஸ் வந்திருக்கு; மக ஜாதி விட்டுக் காதலிச்சுக் கல்யாணம் பண் ணிக்கிட்டான்னு பெத்தவ தூக்கிலே தொங் கிட்டாளாம்! என்ன அசட்டுத்தனம், பார்த்தியா! இப்படி இந்த 1986ல் கூடவா இருப்பாங்க'ன்னு கேட்டேன்!

ரகு: 21ம் நூற்றுண்டு பற்றி பிரதமர் பேசிட்டிருக்கார்ன்னும் சொல்றதுதானே?

சுசி: சொன்னேனே?

ரகு: என்ன சொன்னு, அம்மா?

சுசி: 'அவன் இதாலிக்காரியைக் கல்யா ணம் பண்ணிண்டிருக்கானுெல்லியோ? அப் படித்தான் பேசுவான்! வேறெ எப்படி பேசு வான்'னு ஏக வசனத்திலே ஆரம்பிச்சுட்டா!

ரகு: அடக் கடவுளே, அப்புறம்?

சுசி: தூக்கிலே தொங்கிய தாயாருடைய தன்மான உணர்வை ரொம்பப் புகழ்ந்தாங்க!

ரகு: ஓ காட்! நம்ம ஜனங்க பிரதமர் பிரி யங்கா காலத்திலே கூட மாறப் போறதில்லே!

சுசி: ஏதோ நாலு காசு சம்பாதிச்சா கல் யாணத்துக்கு வரதட்சணை தர வசதியாயிருக்கு மேன்னுதான் உத்யோகத்துக்கு அனுப்பறுங் களாம்! குடும்ப கௌரவத்தின் மீது மகள் தன் நடத்தையால் இடி விழச் செய்தபிறகு, பெற்ற வயிறு பற்றி எரியும் போது, உசிரை வெச்சுண்டு வாழறதைவிடத் தூக்கிலே தொங் கறதுதான் சரியாம்!

ரகு: அப்ப உங்க பெற்றேரை நர்ஸரி வகுப்பில் சேர்த்துட வேண்டியதுதான்!

சுசி: இடம் கிடைக்காதே!

ரகு: இப்பவே புக் பண்ணி, டொனேஷன் கொடுத்து, ரசீது வாங்கிக்கிட்டால் அவங்க அறுபதாம் கல்யாணத்தின் போதாவது இடம் கிடைச்சுடும்!

சுசி: கிடைக்கும்னே வைச்சுப்போம். எதுக்கு அவங்க நர்ஸரி வகுப்பில் சேரணும்?

ரகு: அங்கேதானே, 'ஜாதிகள் இல்லையடி பாப்பா; குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்'னு கற்றுத் தருவாங்க....

சுசி: அதைக் கற்றுத் தந்தால்தான் நாடு உருப்பட்டுப்போகுமே!' பாபாபிளாக்ஷீப்'னு கற்றுத் தந்துன்னு கழுத்தறுக்கிறுங்க...

ரகு: மனசைத் தளரவிடாதே, சுசி.... ஒரு வழி கண்டு பிடிக்கலாம்!

(சாம்பசிவம் டிபன் டப்பாவுடன் நுழை கிருர்.)

சாம்ப: ஒரு வழி என்ன, மூணு வழி இருக்கு இந்த லஞ்ச் ரூமுக்குள் வர. அவை எல்லாருக்கும் தெரிஞ்ச வழிகள்தான். கண்டு பிடிக்க அவசியமேயில்லே.... ஆமா என்ன நாடகம் நடக்கிறது, இங்கே?

(சிகரெட்டைப் புகைத்தபடி ஆனந்த் வரு கிருன்.)

ஆனந்த்: வழக்கமான காதல் நாடகம்தான்!

(மைதிலி தன் பருமனை உருவத்துக்கு ஏற்ற டிபன் காரியருடன் வருகிருள்.)

மைதிலி: எத்தனை தரம் பார்த்தாலும் அலுக்காத நாடகம்!

ரகு: சுசி! லஞ்ச் ரூம் களை கட்ட ஆரம்பிச் சுடுத்து, அப்புறம் பேசலாம்!

(பாண்டியன் வருகிருன்.)

பாண்டி (வந்தபடியே): அப்புறம் என்ன பேசறது? இப்பவே இத்தனை பேர் எதிரேயும் கேட்கிறேன். என்கிட்ட வாங்கின நூறு ரூபாயை எப்போ திருப்பித் தரப் போறே?

ரகு: சீ! தரித்திரம்! முதல் தேதி வரட்டும். முகத்திலே வீசி எறிஞ்சுடறேன்!

ஆனந்த்: வழக்கமான கேள்வி, ரெகுல ரான பதில்! இத பாரு பாண்டியா! ரகு கிட்டேயிருந்து உனக்குக் கடன் வசூலாக ணும்னு அவன் முதல்ல மஞ்சக் கடிதாசு கொடுக்கணும்; அப்புறம் அவனைத் தமிழக அரசு எம்.எல்.ஸி.யா நியமிக்கணும்! இந்த இரண்டுக்கும் ஏற்பாடு பண்ணு. டாண்ணு பணம் திரும்பி வராதா இல்லியா பாரு!

(சிவராமன் வருகிருன்.)

சிவ: (வந்து கொண்டே) நிர்மலா வந் தாச்சா?

ரகு: வெண்ணிற ஆடையா?

சிவ: வெள்ளையோ, பச்சையோ அந்தக் கூடைக்காரி ஏதாவது ஒரு ஆடையை உடுத் திண்டு வந்தால் சரி.

ஆனந்த்: ஆமா, ஆமா. ஆடை உடுத் திண்டு வரச்சேயே 'கிக்' கொடுக்கிற மாதிரி கிண்ணுன்னு ஒரு ரேஸ் குதிரைத் தோற்றம் அவளுக்கு....

சிவ: ஆமா ரேஸ் குதிரை! அதனுல்தான் தினம் தினம் லேட்டா வந்து கழுத்தறுக்குது. பசி பிராணன் போகிறது.

(அவரவரும் மேஜையைச் சுற்றி அமர்ந்து கையில் கொண்டு வந்ததைப் பிரித்துச்

மகிழ்ச்சிகரமான பிறந்த நாளா உங்களுக்கு!
மகிழ்ச்சிகரமான மணநாளா உங்களுக்கு!
பிறந்த நாள் — மணநாட்களை ஒரு வித்தியாசமான முறையில்
கொண்டாடுங்கள்!

பிறந்த நாள், மணநாட்களை மகிழ்ச்சியாகக் கொண்டாடும் பழக்கம் உலகம் முழுவதும் அனைவருக்கும் பொதுவானது. ஆனால் சின்னஞ்சிறார்கள் விஷயத்தில் இவ்விழா இன்னும் அதிக முக்கியத்துவம் அடைகிறது. இக்கொண்டாட்டங்களுக்கு வயது ஒரு தடையில்லை.

விருந்தும், இனிப்பு வழங்குதலும் வேடிக்கை விளையாட்டுக்களும் இவ்விழாக்களின் தனித்தன்மையாகும். மலர் மாலைகள், அன்பளிப்புகள், பணம் இவைகள் நம்மை விரும்புபவர்களால் நமக்குக் கொடுக்கப்படுகிறது.

ஆனால், இவைகள் அனைத்திற்கும் பணமே மிகவும் அவசியம். இந்த சந்தர்ப்பங்களில் நாம் எப்பொழுதாவது எளியோரையும், நோயுற்றோர்களையும் சிறிதளவாவது எண்ணிப் பார்த்தோமா? தேவையுள்ளோருக்கு ஒரு நன்மை செய்தல் என்பது நமக்கு திருப்தியளிக்காதா?

இத்தகு விழாக்களை சிறப்பாகக் கொண்டாடுங்கள். ஆனால் அன்பும், இரக்கமும், ஆசியும் வேண்டி நிற்கும் அனாதைக் குழந்தைகளைப் பற்றியும் சிறிது எண்ணிப் பாருங்கள்.

இப்படிப்பட்ட ஆதரவற்றவர்களின் நலனுக்காக ஏதாவது நாம் வழங்காவிட்டால் மேற்கண்ட கொண்டாட்டங்கள் நிறையுறாது. இக்கொண்டாட்டங்கள் ஆண்டிற்கு ஒருமுறைதானே வருகிறது. அடிக்கடி வரவில்லையே. அந்நாளில் இக்குழந்தைகள் மீதும் தங்கள் கருணைப் பார்வை விழுமானால் அவர்களுடைய வாழ்த்துக்கள் உங்களையும் உங்களுக்கு உரியவர்களையும் வாழ வைக்கும்.

தாங்கள் தங்களது நன்கொடையினை ஒருபொதுநிதியாகவோ அல்லது கட்டிட மானியமாகவோ அளிக்கலாம்.

உதாரணத்துடன் செயல்படுங்கள். திருப்தி கொள்ளுங்கள். சிவானந்த ஆசிரமத்திற்கு தாராளமாக உதவுங்கள்.

பணவிடை, அஞ்சல் ஆணை, காசோலை, உறுதிக் காசோலை மூலமாக அனுப்பலாம்.

**சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்**
**நெ. 20, கம்பர் தெரு,**
**கிழக்கு தாம்பரம்,**
**சென்னை 600 059**

தொலைபேசி எண்: 1. 48248
2. 433384

சாப்பிட ஆரம்பிக்கின்றனர். சிவராமன் ஏக்கத்துடன் ஒவ்வொருவராய்ப் பார்க்கிறான்.)

மைதிலி: போதும் ஸார், நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டுப் பார்த்தது; உங்களுக்குக் கொடுக்காமல் சாப்பிட்டா எங்களுக்கு வயத்தை வலிக்கும்.... நல்லவேளே, அதோ நிர்மலா வந்துட்டா!

(எல்லாரும் உணவை விழுங்குவதை மறந்து படு ஸ்டைலாக வரும் நிர்மலாவைக் கண்களால் விழுங்குகிறார்கள்.)

பாண்டி (குழைவாக): ஏன் நிர்மலா, இத்தனே லேட்டு? பாவம், சிவராமன் பசியிலே துடிச்சுப் போயிட்டான்!

நிர்: (தளுக்குக் குலுக்கான நடிப்புடன்) நான் என்ன பண்ணுவேன் சாமி? வெல்லிங்டன் டாக்கீஸ் பக்கமா பஸ் வந்துக்கிட்டு இருந்திச்சா? சத்துணவுக்காரங்க ஊர் கோலம் போனுங்களா? அதுனல டிராபிக் பிளாக் ஆகிப் போச்சா? பஸ் நகராம நின்னுக்கிச்சா? நானும் கூடையும் பஸ்ஸுக்குள்ளே சிக்கிக்கிட்டோமா? உச்சி வெய்யில் கொளுத்துதா? உடம்பெல்லாம் வேர்த்து ஊத்துதா? படா பேஜாராப் போச்சு சாமி!

பாண்டி (ஏக்கமாக): ஆமா! பாவம், உருகிட்டியே!

ஆனந்த்: ஏன்? நீயும் இறங்கிச் சத்துணவு ஊழியர்களோட சேர்ந்துக்கிறது.....

நிர்: ஆ! அதெப்படி சாமி! நான் நெசமான சத்துணவு கொண்டாரவளாச்சே!

சாம்ப: என்ன அக்கிரமம் இது? சத்துணவு ஊழியர்கள் ஊர்வலம் போக மவுண்ட் ரோடுதான் கிடைச்சுதா? வாட் நான்ஸென்ஸ்! நிர்மலாவை விட்டுத் தள்ளுங்க. சிவராமன், பாண்டியன், ஆனந்த் இவர்களின் பசியையும் ஒதுக்கித் தள்ளுங்க....

மைதிலி: எந்தப் பசியைச் சொல்றீங்க, அவர்களுடைய உடல் பசியையா வயிற்றுப் பசியையா?

சாம்ப: இரண்டையும்தான்.... மவுண்ட் ரோடிலே இப்படி ஊர்வலம் போனல் எத்தனே பேருக்கு எவ்வளவு இடைஞ்சல்? கஷ்ட, நஷ்டங்கள்!

(முத்து வருகிறான்.)

முத்து (வந்தவாறே): அடப் போய்யா! முதல்வர் பதவிப் பிரமாணம் எடுத்துக்கிட்டதே இந்த மவுண்ட் ரோடு மத்தியிலேதானே? அது மட்டும் சரி, சத்துணவு ஊழியர்கள் ஊர்வலம் போவது மட்டும் தப்போ?

சாம்ப: வாய்யா, வா, எதிர்க் கட்சித் தலைவரே!

முத்து: எல்லாத்துக்கும் ஆட்சியில் இருப்பவங்கதான் தவருன வழி காண்பிக்கிறாங்க. அப்புறம், மத்தவங்க தப்பு செய்யும்போது திருத்தத் 'தில்' இல்லாமத் தவிக்கிறாங்க.

(டிபன் பாக்ஸுடன் ராகவாச்சாரி வருகிறார்.)

ராகவா: என்ன கூச்சல் இது! வெறும் தயிர் சாதமும் நார்த்தங்காய் ஊறுகாயும் தான். அதைக்கூட நிம்மதியா சாப்பிடவிடாம ஒரே காட்டுக் கத்தல்!

மைதிலி: இதற்குத்தான் ஸார் தனியா ஆபீஸர்ஸ் டைனிங் ரூம்னு ஒண்ணு ஏற்பாடு பண்ணச் சொல்லிக் கேட்டுக்கிட்டிருக்கேன்; கவனிக்க மாட்டேங்கறீங்க.

முத்து: இதை நான் வன்மையா ஆட்சேபிக்கிறேன். இன்றைய சமத்துவ சமுதாயத்திலே அதிகாரிகள் உண்ணத் தனி அறை என்பது ஒருவகை தீண்டாமையே!

சிவ: ஆமா, முதல்லே தனி டைனிங் ரூம்னு ஆரம்பிக்கும். அப்புறம் ஆபீஸர்ஸுக்கு உணவும் ஆபீஸே அளிக்கும். நீங்க சூப்பிலே ஆரம்பிச்சு ஃப்ரூட் ஸாலாடிலே முடிக்கும் போது, நாங்க இங்கே மோர் சாதத்தை வழிச்சு முழுங்கிக்கிட்டிருப்போம்!

ராகவா: வேண்டாண்டா வேண்டாம். எங்களுக்குத் தனி டைனிங் ரூமும் வேண்டாம். நீ வயித்தெரிச்சல் படவும் வேண்டாம். மைதிலி! இன்னிக்கு என்ன ஸ்பெஷல் பண்ணிண்டு வந்திருக்கே.....?

மைதிலி (குழைவாக நெளிந்து): வெஜிடபிள் உப்புமா ஸார். பொல பொலன்னு கமகமன்னு மணக்கிறது. உங்களுக்குப் பிடிக்குமேன்னு காரியர்லே ஒரு தட்டில் தனியே வைச்சிருக்கேன்.

(எடுத்துத் தருகிறாள்.)

ராகவா: ஹி.... ஹி..... எதுக்குத் தனியா எனக்குன்னு ஒரு தட்டு? நீ சாப்பிட்டுப் பாக்கி இருந்தா கொஞ்சம் மாதிரி பார்க்க அந்தத் தட்டையே தந்தா போதுமே!

ஆனந்த்: கருவாடு குழம்பு கொஞ்சம் டேஸ்ட் பண்றீங்களா ஸார்? நிர்மலா கூடையிலே வைச்சுத் தூக்கிக்கிட்டு வந்ததுலே ரொம்ப டேஸ்ட்டா இருக்கு!

ராகவா: சீச்சீ! அதிகப்பிரசங்கி! முதல்லே சிகரெட்டை அணே. இத்தனே பேர் சாப்பிடறோமே..... லேடீஸ் வேறே இருக்காங்களேன்னு கொஞ்சம் யோசனே வேணும்? உபத்திரவம்!

மைதிலி: ஆரம்பத்திலே உபத்திரவமாத்தான் ஸார் இருந்துது. இப்போ பழகிப் போச்சு!

ஆனந்த்: இன்னும் கேட்டா தேவையாவே இருக்கு! லஞ்ச் ரூமுக்குள் நுழைஞ்சதும் நான் சிகரெட் பிடிக்க ஆரம்பிக்கலேன்ன மைதிலி அம்மாவுக்குச் சாப்பாடே இறங்காது!

ராகவா: அம்மா என்னடா அம்மா? அப்படி என்ன வயசாயிடுத்து மைதிலிக்கு...?

ஆனந்த்: ரிடயராக இரண்டு வருஷம் பாக்கியிருக்குமா?

ராகவா: நீ அந்தத் துர்நாக்கிலேயே கான்ஸர் வந்துதான் சாகப் போறே!

ஆனந்த்: (சிரித்து) பெரிவா ஆசீர்வாதம்!

சாம்ப: பியூன் மாடசாமி என்ன ஆனான்?

காப்பி வரலே இன்னும். தலைவலி கொல்றது ஆளே!

ரகு: அவன் பின்வாசல்லே நிர்மலாவைப் பார்த்திருப்பான். அரட்டை அடிச்சுக்கிட்டு உட்கார்ந்திருப்பான்.

பாண்டி: என்ன!

சிவ: என்ன! என்ன!

ஆனந்த்: என்ன! என்ன! என்ன!

சாம்ப: ஏன், நிர்மலாவைக் கவர் பண்ற விஷயத்திலே அவன் வேற போட்டிக்கு வரானேன்னு மூணுபேருக்கும் கவலையா? துரியோதனன் துச்சாதனன் பரம்பரை!

(ஃபிளாஸ்குடன் மாடசாமி வருகிறான்.)

ராகவா: ஏன் மாடசாமி இவ்வளவு லேட்டு? பாவம், சாம்பசிவம் ஸார் தலைவலியோட காப்பிக்காகக் காத்திருக்கார்!

மாட: இது என்ன ஸார் தலைவலி? இதை விடப் பெரிய தலைவலியெல்லாம் காத்திருக்கு உங்க எல்லாருக்கும்!

ராகவா: மாடசாமி! நீ என்ன சொல்றே?

மைதிலி: போர்டு ரூமுக்குள் கூட சகஜமாப் போய் வர உரிமை பெற்றவனுச்சே, மாடசாமி! அவனுக்குத்தான் ஆபீஸ் பற்றின எல்லா நியூஸும் முதலில் தெரிய வரும்.

சிவ: மாடா! சீக்கிரம் சொல்லு!

மாட: இன்னிக்கு போர்டு ரூமிலே எட்டு டைரக்டர்கள்லே ஆறு பேர் ஆஜர். பாதாம் அல்வா, காஷுனட்ஸ், ஸால்ட் பிஸ்கட்ஸ், காப்பி, சிகரெட் பாக்கெட்டுகள் எல்லாம் வைச்சேனு....

ராகவா: வைச்சே, அப்புறம் சொல்லு!

மாட: செரியனுக்குமட்டும்சர்ச்சில்சுருட்டு வேணும். அதை மட்டும் வைக்கலே. மறந்துட்ட மாதிரி நடிச்சு, அதைக் கொடுக்கப் போற மாதிரி போயி, பூனை போல் கதவைத் திறந்து, மரியாதையா ஸல்யூட் செய்து....

சாம்ப: ஐயோ, விஷயத்துக்கு வாயேன்!

மாட: சொல்லிடுவேன்!

ஆனந்த்: சொல்லுய்யா, கழுத்தறுப்பு!

மாட: சரி, சொல்றேன், கேட்டுக்குங்க! ஆபீஸர்களிலே ஆறு பேரையும் ஊழியர்களிலே ஐஞ்சு பேரையும் ராஜினுமா செய்யச் சொல்லிக் கேட்கப் போறாங்க. ராஜினுமா பண்ணுவிட்டால், டிஸ்மிஸல்!

மைதிலி: ஆக மொத்தம் பதினொரு பேர்! கணக்குச் சரியாத்தான் இருக்கு!

சிவ: ஏன்? ஏன்? எதுக்கு?

மாட: ஊழல் புகார், லஞ்சக்குற்றச்சாட்டு எல்லாம் வந்திருக்கு! எம்.டி. கிட்டே சாட்சியமும் கிடைச்சிருக்கு!

பாண்டி: யார் அந்தப் பதினொரு பேர்?

மாட: எனக்கு என்ன தெரியும்? உங்கள்லே யாரரா வேணுமானாலும் இருக்கலாம்!

முத்து: கட்சிப் பணி கூடக் கிடையாதா?

மாட: ஊஹூம்! பதினொரு பேருக்கும் இனிமேல் பெண்டாட்டி மேற்பார்வையில் வீட்டுப் பணிதான்!

(அந்தப் பதினொரு பேர் யார் என்று அனைவரும் ஒருவர் முகத்தை ஒருவர் சந்தேகத்துடன் பார்த்துக்கொள்கிறார்கள்.)

(திரை)

(தொடரும்)



# சந்தனப்பேலா பரிசு!

வாசகர்களுக்குச் சுலபமான போட்டி!

**விலையுயர்ந்த வெள்ளி சந்தனப் பேலா உங்களை வந்தடைய நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இது தான்:**

பன்னிரண்டு வாரங்கள் வெளி வரப் போகும் இந்தத் தொடர்கதையை ஒரிதழ் விடாமல் படித்துச் சிரிக்க வேண்டும். சிரிக்க வைத்தது யார் என்றும் யோசிக்க வேண்டும்.

முதல் இரண்டு வாரக் கதையை ஒருவரும் அடுத்த இரண்டு வாரக் கதையை இன்னொருவரும் 5, 6 அத்தியாயங்களை மூன்றாவதாக ஓர் எழுத்தாளரும் என்றிப்படி 12 வாரக் கதையை ஆறு எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். எந்தெந்த அத்தியாயத்தை யார் எழுதுகிறார் என்பதைக் கண்டுபிடிப்பதுதான் உங்கள் வேலை. கடைசி இதழில் ஆறு எழுத்தாளர்களின் பெயர்களும் ஒரு கூப்பனும் இருக்கும். கூப்பனில் ஆசிரியர்களை வரிசைப்படுத்தி எழுதி அனுப்புங்கள்.

**எல்லா எழுத்தாளர்களையும் சரியாக வரிசைப்படுத்தியவருக்கு வெள்ளி சந்தனப் பேலா பரிசு!**

**ஒரு தவறு இரண்டு தவறுகளுடன் வரிசைப்படுத்தியவர்களுக்கும் முறையே ரூ. 100, ரூ. 50 ரொக்கப் பரிசுகள் உண்டு.**

ஒருவருக்கு மேல் சரியான விடைகளை எழுதினால் பரிசுகள் பகிர்ந்தளிக்கப்படும்.

— ஆசிரியர், கல்கி.



# கல்கி

1986 மே 4
மலர் 44 இதழ் 40
அக்ஷய சித்திரை 21



## ஆளுனர் வேண்டாமாம்! முதல்வரே போதுமாம்!

'ஆளுனர் பதவி என்பதாகவே ஒன்று வேண்டாம். அதை ஒழித்துக் கட்டி விடலாம்' என்று தமிழக அரசு மத்திய—மாநில உறவுகளை ஆராய்ந்து கொண்டிருக்கும் சர்க்காரியா கமிஷனிடம் கருத்துத் தெரிவித்திருக்கிறது. தமிழக அரசின் இந்தச் சிபாரிசு நமக்கு வியப்பளிக்கவில்லை. ஏனெனில் தமிழக அரசிடமிருந்து இப்படி உருப்படாத யோசனைகள்தான் பிறக்கும் என்பது நமக்குப் பழக்கமாகிவிட்டது!

'கவர்னர்கள் சிலர் சில சந்தர்ப்பங்களில் தாங்களாகவே அல்லது மத்திய அரசின் தூண்டுதலின் பேரில் அதிகார துஷ்பிரயோகம் செய்திருக்கிறார்கள்; அதனால் ஆளுனரே வேண்டாம்' என்பது தமிழக அரசின் வாதம். இது எப்படி இருக்கிறது என்றால், 'போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் சிலர் தாங்களாகவே அல்லது மேலிடத்தின் தூண்டுதல் பேரில் அதிகார துஷ்பிரயோகம் செய்கிறார்கள்; அதனால் போலீஸ் இன்ஸ்பெக்டர்களே வேண்டாம்' என்று கூறுவது போலத்தான்! ஏன், பல முதல்வர்களும் மந்திரிகளும் கூடத்தான் அதிகார துஷ்பிரயோகம் செய்கிறார்கள்; அதனால் முதல்வர் பதவி மந்திரி பதவி எதுவுமே வேண்டாம் என்று கூறிவிடலாமா? தனியார் துறையிலும் சரி, அரசாங்கத்திலும் சரி எந்தப் பதவியும் அதனை வகிப்பவர்களால்தான் பெருமையோ சிறுமையோ அடைகிறது.

ஜனநாயகத்தில் ஆளுனருக்கு முக்கியமான பணிகள் உள்ளன. அதிகார வரம்பு மீறிச் சில சமயம் ஆளுனர் செயல்பட்டால் அந்த அத்து மீறல் சில காலம்தான் கொடி கட்டிப் பறக்கும். சீக்கிரமே அதிகார எல்லைகளை மீறிய அந்தச் செயல் தவறு என்பது உணரப்பட்டு, ஒரு திருப்பம் ஏற்பட்டு, நிலைமை சீர்ப்பட்டுவிடும். இதற்கு நமது ஜனநாயக அமைப்பிலேயே போதிய அளவு பாதுகாப்பு அம்சங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. ஆளுனர் வரம்பு மீறி நடந்து கொண்டதற்கு உதாரணம் தரலாம் என்றால் அந்த அத்து மீறிய செயல் சீக்கிரமே தோல்வியுற்று, மக்களின் விருப்பமே நிலைத்து ஜனநாயகம் பலம் பெற்றதற்கும் உதாரணங்கள் தரமுடியும்.

கவர்னர் பதவியே வேண்டாம் என்று கூறும் தமிழக அரசு, 'அப்படியே கவர்னர் என்பதாக ஒருவர் இருந்துதான் ஆக வேண்டுமென்றால் மாநில முதல்வர் குறிப்பிடுகிற நால்வரில் ஒருவரைத்தான் மத்திய அரசு அம்மாநில கவர்னராக நியமிக்க வேண்டும்' என்கிறது. 'ஆளுனருக்கு எந்தவிதமான அதிகாரமும் இருக்கக் கூடாது; முதல்வர் முன் கைகட்டி நின்று அவர் கூறுகிறபடி கேட்டு நடக்க வேண்டும்' என்கிறது. போதாக்குறைக்கு 'மாநில அரசை நீக்கி ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வருகிற உரிமையே மத்திய அரசுக்கு இருக்கக் கூடாது' என்றும் சொல்கிறது.






கவர்னரை முதல்வரே நியமிப்பது என்றால் அது ஓர் அலங்காரப் பதவியாகிவிடும். மாநில அரசு வழங்கும் ஏராளமான பட்டங்கள், விருதுகள், பதவிகள் போல அதுவும் வேண்டியவருக்கு அளிக்கப்படும் ஒரு சலுகையாகிப் போகும். முதல்வருக்கு ஜால்ரா போடத்தான் கவர்னருக்குத் தோன்றுமே தவிர நல்லது கெட்டதை எடுத்துக் கூறும் துணிவே வராது. இப்படி ஒரு பதவியை ஏற்படுத்துவதைவிட அப்பதவி இல்லாதிருப்பதே மேல்.

கவர்னர் பதவி துஷ்பிரயோகம் செய்யப்பட்டதற்குப் பல உதாரணங்களைப் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் கூறிய தமிழக அரசு, கவர்னர் பதவி எவ்வளவு இன்றியமையாதது என்பதற்குப் புள்ளி விவரங்களையும் உதாரணங்களையும் தேடாமல் போனது வேடிக்கைதான். ஏன், கருணாநிதியைப் பதவியை விட்டிறக்கித் தமிழகத்தில் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வரக் காரணமாக இருந்தவரே இன்றைய தமிழக முதல்வர்தானே? அன்று தேவைப்பட்ட கவர்னர் இன்று தேவையில்லை என்றால் அன்றைய எம்.ஜி. ஆரின் நடவடிக்கையே தவறு என்பதாக அல்லவா ஆகும்! அதை ஒப்புக் கொள்கிறதா அ.தி.மு.க. கட்சியும் ஆட்சியும்? அது மட்டுமா, சமீபத்தில் எம்.ஜி. ஆர். நோய்வாய்ப்பட்டு அமெரிக்காவில் இருந்தபோது இங்கே தேர்தல் முடிந்து அமைச்சரவை அமைக்க முடியாத நிலை எத்தனை நீண்ட காலத்துக்கு இருந்தது? அப்போது தமிழகத்தின் ஆட்சியில் வெற்றிடம் தோன்றாமல் நிர்வாகம் தொடர்ந்தது, கவர்னர் என்ற ஒரு பதவி இருந்ததன் காரணமாகத் தானே!

இப்படி வேறு மாநிலங்களிலும் எத்தனையோ உதாரணங்கள்.

ராஜாஜி சொன்னார்: ''தீ அணைப்பு நிலையத்தில் தீ அணைப்பு வண்டி பல காலம் தூங்கும்; ஆனால் ஒரு நாள் அதற்குத் தேவை ஏற்படும். அப்போது அதன் அவசியமும் உணரப்படும். அதுபோல கவர்னர் பதவி என்பது அலங்காரப் பதவி போல் தோன்றும். ஆனால் ஓர் இக்கட்டான சந்தர்ப்பத்தில் அப்பதவி எவ்வளவு இன்றியமையாதது என்பது தெரிய வரும்.''

கவர்னர் பதவியை ஒழிப்பதோ, அதிகாரங்களைக் குறைப்பதோ கூடவே கூடாது!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# பத்திரிகைகள் பிரதமருக்கு

* மன்னார்குடி தேரோட்டி, ஸ்ரீரங்கம்

? பாரி வள்ளல் பெயரால் தமிழக அரசு. புதிதாகலாட்டரிச்சீட்டு ஆரம்பிக்கப்போகிற தாமே?

! பெயர் மாற்றியும் சூட்டியும் பெருமைப் படுத்துவதாகத் தமுக்கடித்தவர்கள் பெயர் சூட்டி அவமானப்படுத்தவும் முடியும் என்று காண்பிக்கிறார்கள்.

* மு. செந்தில்வாசன், திருமருகல்

? கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கரங்களை உடையவர் யார்?

! மக்கள்தான். லஞ்சம் கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கரங்களை உடையவர்கள்.

* ஆர். ஆனந்த், கும்பகோணம்

? பத்திரிகைகள் தமது கட்சிக்கு எதிராகச் செயல்படுவதாகப் பிரதமர் கூறியிருக்கிறாரே?

! ஆட்சியை விமர்சிப்பதும் நல்லதை எடுத்துச் சொல்வதும் பிரதமரையும் அவரது கட்சியையும் எதிர்த்துச் செயல்படுவதாகி விடாது. நட்பின் இலக்கணமே இடித்துரைப்பதுதான் என்கிறார் வள்ளுவர். இதைப் புரிந்து கொண்டு ஆரம்பத்தில் தம்மை வாழ்த்தி வந்த பத்திரிகைகள் இன்று இடித்துரைக்க ஆரம்பித்திருப்பது ஏன் என்று பிரதமர் யோசிக்க வேண்டும். இதில் அவர் தவறினால் தாயின் வழியில் சென்ற தனயன் ஆவார்.

* ஸ்ரீபட்டாபிஷேகப் பிரியன், குடியாத்தம்

? 'நானும் திருமதி அகினோவைப் போல் மாறி ஜியாவை விரட்டியடிப்பேன்' என்று பெனாசிர் கூறியுள்ளாரே?

! திருமதி அகினோவுக்கு இவர் வழிகாட்டியாக இருக்க முடிந்திருந்தால் நினைத்ததைச் சாதித்திருக்கலாம். ஆனால் திருமதி அகினோவின் வழியை இவர் பின்பற்ற நினைப்பதால் தந்திரசாலி ஜியா உஷாராகி விடுவார். எண்ணியதை முடிக்க முடியுமா, சந்தேகம் தான்!

* ஜி. மெய்யப்பன், லெட்சுமாங்குடி

? இன்றைய சூழ்நிலையில் எம்.ஜி. ஆர். எதைச் செய்தால் சிறப்பாய் இருக்கும்?

! ஆளும் கட்சி, சட்டசபை உறுப்பினர்களைக் கூட்டி, ரகசிய வாக்கெடுப்பு நடத்தி, மனச்சாட்சிப்படி வோட்டளிக்க அனுமதித்து, புதிய ஆட்சித் தலைவரை அவர்கள் தேர்ந்தெடுத்ததும் அந்நபருக்குத் தமது முழு ஆதரவையும் ஆசிகளையும் வழங்கினால் சிறப்பாக இருக்கும். ஆனால் எதையுமே செய்யாத





...... இவர்.





எம். ஜி. ஆர். இதையா செய்யப் போகிறார்!

* ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்

? பாரதி ராஜா தமிழ் திரை உலகுக்குச் செய்த சேவை என்று எதைச் சொல்வீர்கள்?

! பணக்கார வீடுகளையும் நட்சத்திர ஓட்டல்களையும் பெரும்பாலும் சுற்றி வந்து கொண்டிருந்த தமிழ் சினிமாவைக் கிராமப்புறத்துக்கு அழைத்துச் சென்றது மட்டும் அவர் சேவையில்லை (அவருக்கு முன்னும் சிலர் இதைச் செய்ததுண்டு.) கிராமப்புற மக்களை யதார்த்த நோக்கில் நம்மைக் காண வைத்தது தான் அவர் பெருமை.

* ப. விஜயபாலன், பம்பாய்

? சோப்ராஜ் போன்ற கொலைக் குற்றவாளிக்கு இத்தனை விளம்பரமா?

! அவருக்கு விளம்பரம் என்று நீங்கள் எண்ணுவதுதான் தவறு. திஹார் சிறையில் நிலவும் லஞ்ச ஊழல்களை அம்பலப்படுத்தியதாகவும் போலீஸ் அதிகாரிகளின் திறமைகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்ததாகவும் சர்வ தேசக் குற்றவாளிகளின் நடைமுறைகளைப் புரிந்து கொள்ள வழிவகுத்ததாகவும் கருத வேண்டும்.

* பி. சத்தியநாராயணமூர்த்தி, சாலிகிராமம்

? ஷார்ஜாவில் ஆஸ்ட்ரலேஷியா கோப்பையை இந்தியா கோட்டை விடும் என்று எதிர்பார்த்தீர்களா?

# எதிராகச் செயல்படுகின்றனவா?

! ஸ்ரீலங்காவுடன் மோதும்போதே நம்மவர் திண்டாடித் திணறியதைப் பார்த்த பிறகு இறுதி ஆட்டத்தில் எந்த நம்பிக்கையுடன் இந்தியாவின் வெற்றியை எதிர்பார்க்க முடியும்? எனவே கோப்பையை நம்மவர் கோட்டை விடுவார்கள் என்று எதிர்பார்க்கா விட்டாலும் வென்றுவிடுவார்கள் என்றும் உறுதியாக எண்ண முடியவில்லை. இரண்டுங் கெட்டான் மனநிலைதான்.

* சித்ரா தேவி, ஈரோடு

**? கடைசி பந்தில் சிக்ஸர் அடித்து வெற்றியைத் தழுவிய மியான்தாத் பற்றி?**

! பாராட்டலாம் என்று பார்த்தால் சேதன் சர்மா போட்டுக்கொடுத்த ஃபுல்டாஸ்தான் அப்படி தண்டிக்கப்பட்டது என்ற எண்ணம் குறுக்கே நிற்கிறது. எனவே இந்தக் கடைசி ஷாட்டுக்காக அல்லாது அந்த மாட்சில் மியான்தத்தின் ஒட்டு மொத்தமான வாண வேடிக்கை போன்ற அபார ஆட்டத்துக்காக அவரைப் பாராட்டலாம். நம்முடைய பாட்ஸ்மான்களும், (கவாஸ்கர், ஸ்ரீகாந்த், வெங்சர்க்கார்) அமர்க்களப்படுத்தத்தான் செய்தார்கள். ஆனால் போலர்கள் கைவிட்டுவிட்டார்களே! மொத்தத்தில் ஒரு திரில்லிங் அனுபவத்தை அளித்த இரு கட்சியினருமே வாழ்த்துக்குரியவர்கள்தான்.

* வீ. அருண், கீரமங்கலம்

**? சுதந்திரப் போராட்டத் தியாகிகளுக்கும் இப்போதுள்ள அரசியல்வாதிகளுக்கும் என்ன வித்தியாசம்?**

! அவர்கள் மக்களுக்காகத் தியாகம் பண்ணினார்கள். இவர்கள் மக்களைத் தியாகம் பண்ணச் சொல்கிறார்கள்.

*. லீலா இராம், தக்கலை

**? அண்மையில் யாரை ஓடிப் போய்ப் பாராட்ட வேண்டும் என்று எண்ணினீர்கள்?**

! புத்தாண்டு தினம். அதிகாலை. காஞ்சி பரமாச்சார்யாள் பற்றிய பாடல் ஒன்று எம்.எஸ். அவர்களின் குரலில் வானொலியில் ஒலிக்கிறது. சகானாவில் அமைந்த அதைக் கேட்டு மெய்சிலிர்த்துப் போகிறேன். பரமாச்சார்யாளிடம் நம் பக்தி இருக்கவே இருக்கிறது. எம்.எஸ்.ஸின் குரலினிமையும், இசை ஆற்றலும் பக்தி பாவமும் நாம் அறிந்த விஷயம். இவற்றோடு அந்தப் பாடலின் சொல் நயமும் கருத்தழகும் சேர்ந்து கொள்கின்றன.

முன்னம் ஓர் ஆலின் கீழ்
  மோனமாய்க் கை காட்டி
சொன்னதை வாய் மலர்ந்தே
  சொல்லி யருள் செய்ய.....

'என்ன ஆழமான கற்பனை! ஆயினும் எத்தனை எளிய வார்த்தைகள்!' என்று எண்ணிப் பரவசமாகிறேன். பெ. தூரன் அவர்களை ஓடிச் சென்று பாராட்ட வேண்டும் என்றுதான் தோன்றுகிறது. மூச்சிரைக்குமே என்பதால் கடிதம் எழுதுவதோடு திருப்தி அடைகிறேன்!

* சி. ஆர். நாகராஜன், வளவனூர்

**? சட்டமன்றத்துக்கும் நீதிமன்றத்துக்கும் வித்தியாசம் என்ன?**

! நீதிமன்றத்தில் காட்டுக் கூச்சல் போட முடியாது; பேப்பர் வெயிட்டை எறிய முடியாது; வேஷ்டியை அவிழ்க்க முடியாது; கண்டபடி பேச முடியாது; வீண் சவால் விட முடியாது; எல்லாவற்றையும் அவைக் குறிப்பிலிருந்து நீக்கி மறைத்துவிடுமாறு உத்தரவிட முடியாது; இன்று ஒரு தீர்ப்பு வழங்கி நாளை வாபஸ் பெற முடியாது.....

* செல்வ பாரதி, ஈரோடு

**? பெங்களூரில் பிச்சையெடுத்த பட்டதாரி வாலிபர்கள் பற்றி உங்கள் கருத்தென்ன...?**

! இதைப் பற்றி நாம் அதிகம் பேசாமல் இருப்பதே நல்லது. அரசாங்கம் இதையும் சுய வேலை வாய்ப்புத் திட்டத்தில் ஒன்றாக அறிவித்துவிடக் கூடும்!

* வீ. அருண், கீரமங்கலம்

**? இப்போதைய நடிகைகளில் ஒரு நடிகையர் திலகமோ நாட்டியப் பேரொளியோ உருவாகவில்லையே, ஏன்?**

! ரெடிமேட் பொட்டுக்களும் ஆர்க் லாம்ப்களும் அதிகமாகிவிட்டதால் இருக்கலாம்.

**நீங்கள் கேட்டவை**
**— தராசு**

ரூ 10 பரிசு பெறுபவர்:

ஜி. மெய்யப்பன்
59, கடைத் தெரு,
V.P.M. ரோடு,
லெட்சுமாங்குடி, 614 102.





* வாண வேடிக்கை!

பொன் போல் பேணி,
கருத்துடன் கட்டிக்காத்து, இன்று பெருமையுடன் .......



லலிதாஸ்.
ஆசியாவிலேயே
தங்க நகைகளுக்கான
மிகப்பெரிய ஷோரூம்



இலங்கையில் மாசுமறுவற்ற தங்கத் தரத்தைக் கொண்ட நகைகளை வாங்க எண்ணுபவர்கள் தவறாமல் செல்லும் முதல் இடம் , கொழும்பு வின் ஒரு முக்கிய வீதியில் அமைந்திருக்கும் ஒரு தங்க தர்பார். அதுவே லலிதாஸ். ஆசியாவிலேயே தங்க நகைகளுக்கான மிகப் பெரிய ஷோரூம்.

இந்த. தங்க தர்பார் அளித்த 'முதன்மை' என்ற ஸ்தானமே அவர்களை உலக அரங்கில், ஸ்பெயின் நாட்டிலுள்ள மாட்ரிட் என்ற நகரத்தில், போட்டிக்கு எடுத்துச் சென்றது. முடிவு , 1983 மற்றும் 84ஆம் ஆண்டுகளுக்கான 'மாசுமறுவற்ற தங்கத்தரத்தை மேற்கொள்பவர்கள்' என்ற பரிசு லலிதாவிற்கு அளிக்கப்பட்டது. ஒன்றல்ல, இரண்டல்ல, கடந்த 35 வருடங்களாக தங்க நகைத் தொழிலில் லலிதாஸ் இந்த இணையற்ற தரத்தை கடைப்பிடித்து வந்துள்ளது.

இந்த தரமும் அனுபவமுமே லலிதாவிற்கு இலங்கையில் ஒரு ஆஸ்தான ஸ்தானத்தை தேடித்தந்துள்ளது. இலங்கை வங்கிகளுக்கான, அரசு அங்கீகாரம் பெற்ற தங்கத்தர நிர்ணயாளர்கள் என்ற இந்த ஸ்தானத்தை 1975லிருந்து லலிதாஸ் தனதாக்கிக் கொண்டுள்ளது.

இப்பொழுது லலிதாஸ் உங்களுக்கு அளிப்பது 2500க்கும் மேற்பட்ட ஈடுஇணையில்லாத தங்க, வைர மற்றும் வெள்ளி நகைகள். கலைக்கண்ணோடு, நுண்ணிய வடிவுகளில் பிறந்துள்ள ஒவ்வொன்றும் மணிக்கணக்காக, நாட்கணக்காக ஏழு திறன் வாய்ந்த கலைஞர் குழுக்களின் உழைப்பின் பிறப்புகளே.

மேலும் இவற்றை காண...... உங்களை கடல் கடந்து இலங்கைக்கு செல்லவேண்டும் என்று கூறவில்லை.




இப்பொழுது இங்கு சென்னையிலேயே.

**லலிதா ஜுவல்லரி மார்ட்**

*123 உஸ்மான் ரோடு, பனகல் பார்க்,*
*தி. நகர், சென்னை - 600 017.*
*தொலைபேசி : 445939, 442601.*

# கல்கியின் தூண்டுகோலும் காரணம்!

## வட்ட மேஜை

* கல்கி 6.4.86 இதழில் இராதாபுரம் ஊரில் உள்ள குறைபாடுகளை எழுதியிருந்தீர்கள். நன்றி. உடனடியாகக் 'கள்ளுக் கடை' ஊருக்கு வெளியே அப்புறப்படுத்தப்பட்டுவிட்டது. தவிர, நான்கு குடி நீர் மேல் நிலை நீர்த் தேக்கங்களின் மின் மோட்டார்கள் சரி செய்யப்பட்டு முன்னைவிட இரு மடங்கு தண்ணீர் மக்களுக்குக் கிடைக்கிறது. மேலும் ஒரு லட்சம் ரூபாய் மதிப்பீட்டில் ஒரு மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டி வேலை ஆரம்பித்து நடந்து வருகிறது. மருத்துவமனை நான் அரசுக்கு நன்கொடையாகக் கொடுத்த இடத்தில்தான் கட்டப்பட்டுள்ளது. அங்கு நிரந்தரமாக எம்.பி.பி.எஸ். டாக்டர் நியமிக்க ஏற்பாடுகள் செய்து வருகிறேன்.

இராதாபுரம். டி.எம். பண்டார சிவன், ஊராட்சி மன்றத் தலைவர்.

* கல்கி ஏப்ரல் 13 இதழில் விடுதலைப் போராட்டத்தில் ஆந்திர மாநிலத்தின் பங்கு பற்றி எழுதும்போது, எல்லோராலும் நன்கு அறியப்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகத் தலைவர் தோழர் பி. சுந்தரய்யா அவர்களைப் பற்றி ஒரு வரிகூடக் கூறாதது கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தேன்.

சென்னை—5. எஸ்.ஆர். சேகர், அலுவலகச் செயலாளர், சி.ஐ.டி.யு.

* ஏப்ரல் 13 ஆந்திரா சிறப்பிதழில் 'தமிழகத்தில் ஆந்திரா' கட்டுரையில் எல்.வி. பிரசாதும் பானுமதியும் இடம் பெற்றுள்ளபோது நிச்சயமாக சித்தூர் வி. நாகையாவும், நாகி ரெட்டியும் இடம் பெற்றிருக்க வேண்டும். கட்டுரை நிறைவு பெறாததாகத் தோன்றுகிறது.

திருப்பத்தூர். ஏ.எஸ்.ஏ. சாமி

(கட்டுரைக்கான முன்னுரையில் 'அத்தனை பேரையும் பற்றிச் சொல்ல இயலாது; சேம்பிளுக்குச் சிலர்' என்று குறிப்பிட்டிருந்தோம். இடமின்மையே காரணம் — ஆசிரியர்.)

கல்கி 6.4.86 இதழில் தராசு பதில் பகுதியில் இலக்கியச் செல்வரைப் பற்றி கிண்டலாகப் பதில் எழுதப்பட்டுள்ளது. குமரி அனந்தன் பத்திரிகை நிருபர்களிடம் ஆதாரத்தோடு கா.கா.தே.கா. ஆதரவு இல்லாததால் தோற்ற நகர சபை, பஞ்சாயத்து மட்டும் மொத்தம் 51 என்று பேட்டி கொடுத்தார். உதாரணமாக ஆற்காடு நகர சபையில் தி.மு.க. 7309 வாக்கும், இ. காங்கிரஸ் 6622 வாக்கும், கா.கா.தே.கா. 1456 வாக்கும் பெற்றுள்ளது. அ.தி.மு.க., இ. காங். இவற்றுடன் நாங்கள் கூட்டு சேர்ந்திருந்தால் 1456 வாக்கு இ. காங்கிரஸுக்குக் கிடைத்திருக்கும். தி.மு.க. தோற்றிருக்கும்!

சென்னை—13. ந. சங்கு செல்வம், 10 வது வட்டச் செயலாளர்.

* மார்ச் 13ம் தேதி கல்கி பிரதிநிதிகள் செல்லிய கவுண்டனூருக்கு வந்து அங்குள்ள பிரச்னைகளைப் பற்றித் தெரிந்து கொண்டு போனார்கள். மறுநாளே அப்பிரதிநிதிகள் கலெக்டரைச் சந்தித்து அந்தப் பிரச்னைகள் பற்றி விவாதித்திருக்கிறார்கள். அடுத்த இரண்டே வாரங்களில் அதாவது மார்ச் கடைசியில் செல்லிய கவுண்டனூர் அரிசன காலனியைச் சேர்ந்த ஒன்பது பேர்களுக்கு தலா ரூ 2,000/— தவணை முறைக் கடனுகக் குறைந்த வட்டியில் வழங்கியிருக்கிறது அரசு. அந்தத் தொகையைக் கொண்டு, தொழில் அல்லது வியாபாரம் தொடங்கி அதைச் சிறப்பாக நடத்தவும் வழிகாட்டியிருக்கிறது. அரசு இந்த அளவுக்குத் துரிதமாக நடவடிக்கை எடுத்து அந்தக் கொத்தடிமைகளுக்குக் கை கொடுத்திருப்பதற்குக் கல்கியின் தூண்டுகோலும் காரணமாகும் என்றே நம்புகிறேன். தொடர்ந்து முயற்சி எடுத்து அந்த அரிசனங்களுக்கு எரிந்து போன வீடுகளை அகற்றிப் புது வீடுகளைக் கட்டித் தரும் என்றும் எதிர்பார்க்கிறேன்.

ஊஞ்சப்பாளையம். கே. ஈஸ்வரன்.

* பால் மணம் மாறுவதற்கு முன்பே கொத்தடிமை ஆகிவிட்ட தமிழரசியின் படத்துடன் வெளியான கட்டுரை கண்ணீரை வர வழைத்துவிட்டது.

எம். தியாகராஜன்.
சென்னை—28.

* இந்தக் காவிரியையே இப்படி சொன்னீங்களே, எங்கள் மயிலாடுதுறை காவிரியைப் பார்த்தா வாழ்க்கையையே வெறுத்துடுவீங்க! 'சர்வ காரிய தீர்த்தம்' என்று பிரசித்தி பெற்றது!

இடவை இராஜன்.
திருவிடைமருதூர்.



* அட்டைப் பட கட்டுரையில் காவிரி ஆறு பற்றி எழுத்துக்களில் சொல்லி இருப்பதைக் காட்டிலும் ஒரே ஒரு காமிரா ஷாட் மூலம் (வண்ணப்படம்: அட்டையில்) சொல்லியிருப்பதுதான் இன்னமும் நெஞ்சில் நின்று கொண்டிருக்கிறது!

கே.ஜி. எஃப். பழநிச்சாமி.
பெங்களூர்—10.

* யார் முடிப்பது? மிகவும் வேதனையான இந்த விஷயத்தைத் தாங்கள் நாடகமாக்கி "கிளைமாக்ஸில் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். வேறு வழியில்லை என்று எழுதிவிட்டீர்களே!

தோழுந்தூர். சி. சுப்பு.

* அளவான குடும்பம், தெவிட்டாத இன்பம் இது அரசாங்க அறிவிப்பு. 'அளவான குடும்பம் தான் ஆனாலும் வறுமைதான்' — இந்திய குடிமகனின் அறிவிப்பு, அப்பப்பா! எவ்வளவு வித்தியாசம்!

எச். ஹெச். ஷேக்தாவுத்.
திருச்சி—8.

* கே.ஏ.கே. விஷயத்தில் தராசுவின் கணிப்புத் துளிக்கூட பிசகவில்லையே!

மதுரை—1. வி. சந்திரசேகரன்.

* கே.ஏ.கே.யின் செயல் முதுகெலும்பு உள்ளவர்கள் செய்யும் செயல் என விலாவாரியாக விளக்கம் எழுதியுள்ள கல்கியின் தலையங்கம் எங்களுக்குப் பல சந்தேகங்களைத் தீர்த்து வைத்ததோடல்லாமல் உண்மை நிலையைத் தெளிவுபடுத்தியது.

சீர்காழி—10. ஆர்.எஸ். இராஜ்.

* வானத்திலிருந்து குதித்தோராய் ஆடிக் கொண்டிருக்கும், அதிகார வர்க்கத்துக்கு இடையில், அறிவார்ந்த முறையில், பேட்டியும் கொடுத்து, follow-up ஐயும் செவ்வனே செய்து, அதையும் முறையாக பத்திரிகைக்குத் தெரிவித்த எங்கள் மாவட்டக் கலெக்டரின் பண்பும், பொறுப்புணர்ச்சியும் பாராட்டுக்குரியவை.

மதுரை—1. நூர்.



# நெருப்பாக நீ

இன்பா, தன் கண்ணெதிரே விரிந்த சின்ன ஸ்டேஷனையும், அதற்கு விளிம்புக் கட்டினாற் போல் அமைந்த கறுப்புத் தார் பூசிய கட்டைகள் அணி வகுத்து நின்ற வேலியையும், ஸ்டேஷனுக்குள் மிகச் சுதந்திரமாய், பிளாட்பாரம் டிக்கெட் கூட வாங்காமல் நிரந்தரமாய்க் குடை விரித்திருந்த கல்யாண முருங்கை மரத்தையும், ஸ்டேஷனுக்கு வெளியே பச்சென்று கம்பளம் போட்டாற் போலப் படர்ந்திருந்த வயல்வெளிகளையும் பார்த்தபடி அப்படியே நின்றுவிட்டாள்.

நந்து, அவள் முகத்துக்கெதிரே விரலால் சொடுக்குகிறான்

''ஹேய்!''

''உம்....''

''இங்கேயே மலைச்சு நின்னுட்டா எப்படி?''

அவன் பளீரெனச் சிரிக்கிறான்.

இன்பா அவனுடன் கிளம்பினதிலிருந்தே, அவன் முகத்தில் நிலா வீச்சாக ஒரு சிரிப்பு தங்கிவிட்டது....

இல்லையென்றால், சென்னையில் கிளம்பியதிலிருந்து சொந்த ஊர் மண்ணை மிதிக்கும் வரையில், எத்தனை பேரின் சட்டைக் காலரைப் பிடித்து உலுக்கியிருப்பான் இவன். எத்தனை பேருக்கு 'முட்டாள், அயோக்ய ராஸ்கல்' பட்டங்களை வழங்கியிருப்பான். ரயில், நேரத்துக்குக் கிளம்பாவிட்டால், ரயில்வே அதிகாரிகளை மட்டுமின்றி, மத்திய மந்திரிகளைக்கூட மானசீகமாய், பக்கத்தில் இழுத்து வந்து திட்டுவானே அவன்.

ஒரு பெண், அதுவும் அவனது உள்ளும் புறமும் காற்றாய் வியாபித்திருக்கும் பெண், பக்கத்தில் வரும்போது, கோபப் பட வேண்டிய விஷயங்களுக்குக்கூடக் கோபம் வர மாட்டேனென்கிறதே..... அது எப்படி?

அவன், நிமிஷத்துக்கொருதரம், தன் பக்கத்தில் வரும் இன்பாவைத் திரும்பிப் பார்த்து, புன்னகை புரிந்தபடி வந்ததில், பிரயாணக் களைப்பு கூடத் தெரியாதவனாக அன்றுதான் புதிதாகப் பிறந்தவன் போல் இருக்கிறான்.

''கும்பிடறேங்க சின்னய்யா.''

நெடுநெடுவென வளர்ந்த தேகத்தை மிகச் சிரமப்பட்டு வளைத்தபடி, நந்துவின் எதிரே வந்து நின்ற முதியவனைக் கண்கொட்டாமல் பார்க்கிறாள் இன்பா.

புதராய் அடர்ந்த மீசை, சுத்தமாய் வெளுத்து, பஞ்சு பறந்திருந்தது. புருவங்கள் இரண்டும் இரு வெண் பனி மலைகள் போல், தலை முடி, அவன் கட்டியிருந்த தலைப்பாகையையும் மீறி வெளியே வழிய....

தாடியில் இல்லாத கறுப்பு, தலைமுடியில் மட்டும் இன்னும் ஆங்காங்கு இழைய....

''சௌக்கியமா மாதையா..... அப்பா, அம்மா எல்லாரும் எப்படி இருக்காங்க....?''



அவன், நந்துவின் கேள்விக்குத் தலையை மட்டும் பெரிசாய் ஆட்டியபடி, இன்பாவைப் பார்த்துச் சிரிக்கிறான்....

"உம். இவங்கதான் உங்ககூட காலேசுல படிக்கிறவங்களா அய்யா...."

"ஆமா மாது."

நந்து, இன்பாவின் பக்கம் திரும்புகிறான்.

"இன்பா, இவன்....."

"உங்க வீட்டு சாரதி..... சரிதானே,



கையிடுக்குல இருக்கிற சவுக்கே சொல்லுதே.''

மாதையன், இன்னும் அகலமாய்ச் சிரிக்கிறான். புகையிலை மென்று இருண்ட குகை போன்ற வாயில், சின்ன சிம்னி விளக்கை ஏற்றி வைத்தாற் போல ஒற்றை தங்கப் பல் மினுக்குகிறது.

''சவுக்கு ஒரு பாவ்லாவுக்குத்தான் குழந்தை... நான் என்னிக்குமே வாயில்லா ஜீவனுங்களை அடிக்க மாட்டேன்.''

அவன், பெட்டி படுக்கைகளைக் கொண்டு போய் மாட்டு வண்டியிலேற்ற, பச்சைக் கொடியைச் சுருட்டியபடி, நந்துவின் பக்கத்தில் வந்த ஸ்டேஷன் மாஸ்டர், உரிமையுடன் அவன் தோளைத் தட்டிக் கொடுக்கிறார்.

''வாடாப்பா, நந்தகுமாரா.... சௌக்கியமா?''

''இருக்கேன் சார்.''

''இந்தத் தடவையாவது எங்களுக்குக் கல்யாணச் சாப்பாடு போடுடா.... இதாரு?''

''என்னோட காலேஜிலே படிக்கிறா....''

''பேஷ், பேஷ்.... ஏன் குழந்தே, நீ என்ன ஜாதி....?''

''சார்.''

இன்பா புருவத்தை உயர்த்தியபடி, ஒன்றும் புரியாதவளாக மலங்கமலங்க விழிக்கிறாள்.

''கேட்கிறேனேன்னு தப்பா நினைச்சுக்காதே. பார்த்ததும் ஜோடிப் பொருத்தம் பிரமாதமா இருந்தது. கேட்டேன்.... ஜாதியை விடு. உன் டேட் ஆஃப் பர்த் என்ன...?''

''தெரியாது சார்.''

''பொறந்த நாள் கொண்டாட மாட்டியா? நல்ல பொண்ணும்மா நீ.... சரி, பத்துக்குள்ள ஒரு நம்பர் சொல்லு.''

''ரெண்டு.''

''இன்னொரு தடவை.''

''ஏழு.''

''அப்ப நீ சந்திரனோட ஆதிக்கத்துலதான் பொறந்திருப்பே. கண்டிப்பா விருச்சிக ராசி. இப்ப ஏழரை நாட்டு சனி. கவலைப்படாதே. கொஞ்சம் படுத்தும். மத்தபடி ஓ.கே. சனிக்கிழமையில் சனீஸ்வர பகவானுக்கு அர்ச்சனை பண்ணு. கந்த சஷ்டி கவசம் சொல்லு. எப்பேர்ப்பட்ட கண்டத்தையும்....''

மேற்கொண்டு ஏதோ சொல்ல வந்தவர், நந்துவின் முகத்தைக் கண்டதும், நாக்கு மேலண்ணத்தில் போய் ஒட்டிக் கொள்ள 'கப்'பென்று அடங்குகிறார். பளபளக்கும் வழுக்கைத் தலையை விரலால் நீவி விட்டபடி அசட்டுப் பார்வை பார்க்கிறார்.

''நான் அப்புறமா வந்து உங்ககிட்ட பேசறேன் சார்.''

இன்பா, செம்மண் ரஸ்தாவில், கழுத்துச் சதை குலுங்க ஓடும் இரட்டை மாடுகளையும் பார்த்தபடி வருகிறாள்.

அது என்னவோ, இந்த ஊரின் ஆரம்பமே மிகவும்பிடித்துவிட்டது அவளுக்கு. அதையும் விட இந்த வண்டிக்கார மாதையன்....

ஆயில் பெயிண்டிங் செய்வதற்கு ஏற்ற முக அமைப்பு. கறுத்த முகமும், வெண் தாடியும், வெள்ளையும் கறுப்பும் கலந்த தலை முடி

யும் போர்ட்ரெய்ட்டுக்குப் பொருத்தமானது.

இதை அவள் நந்துவிடம் சொல்ல, நந்து மாதையனிடம் சொல்கிறான்.

''மாது, இன்பாவுக்கு உன்னைப் படமா வரைஞ்சு பார்க்கணும் போல் ஆசையா இருக்காம்.''

அவன், லேசாகத் திரும்பிப் பார்த்துச் சிரிக்கிறான்.

''இதெல்லாம் என்னு குழந்தை.... இப்ப என்னைய வரைஞ்சா காகிதமும், வர்ணமும் தான் செலவாகும். நீ, என்னை இருபது வருசத்துக்கு முன்னாடி பார்த்திருக்கணும். கட்டுக் குடுமியும், கருக்கரிவா மீசையுமா எம் பொஞ்சாதி என் குடுமியைப் பார்த்து மயங்கித் தானே கட்டிக்கிட்டா.... இருபது வருசத்துக்கு முந்தி, அதாவது என்னோட நாப்பதாவது வயசுல.... எம் மவனுக்குக் கண்ணாலம். உரு மாலைப் போட்டுட்டு நான் முன்னாடிப் போனேனா....அம்புட்டுசனங்களும்என்னைத் தான் மாப்பிள்ளையின்னு நினைச்சுட்டு ஆரத்தி கரைச்சிட்டு ஓடியாந்தாங்க பாரு. எம் பொஞ்சாதி கண்ணாலை ஒரு வெட்டு வெட்டினா. நான் ஓடிப் போய் அவள் பக்கத் துல நின்னுக்கிட்டேன்.''

இன்பாவின் சிரிப்பு, மாட்டுச் சலங்கை யுடன் போட்டி போடுவதாய்....

இதற்குள் ஊர் நெருங்கிவிட்டதற்கு அடையாளமாய் ஆங்காங்கு வீடுகள். பல வீடுகளில் சாணம் தெளிக்கப்பட்டு, வாசலை அடைத்தாற் போல மிகப் பெரிய கோலங்கள். வண்டிச் சத்தத்தைக் கேட்டுப் பதறி யடித்துக் கொண்டு பறக்கும் கோழிக் குஞ்சுகள். ஒரு தெருவைக் கடந்ததுமே, வண்டியின் பின்புறத்தைப் பற்றியவாறு நாலைந்து சிறுவர்கள்.

''டோய்.... பெரிய வூட்டுப் புள்ளை வராரு டோய்!''

''வணக்கம் சார்.''

''படிச்சு முடிச்சுட்டீங்களா துரை.''

''ஏலேய்.... கூட யாருடா....?''

''சினிமாக்கார பொம்பிளை டோய்!''

மாதையன், சவுக்கைச் சொடுக்கியபடியே ஓர் அதட்டல் போடுகிறான்.

''டேய்....வண்டியை விட்டு நகருங்கடா.... மயிலே பாயற வேகத்துல தடுக்கி விழுந்திங் கன்னா மூஞ்சி, மொகறையப் பேர்த்துப் பீங்க.''

நந்தகுமார், கோபத்தில் முகம் சிவந்து, இன்பாவைப் பார்த்ததும், நிதானப்படுத்திக் கொள்கிறான்.

''சரியான நாட்டுப்புறம்க.... யாராவது கொஞ்சம் டீஸண்ட்டா, டிரஸ் பண்ணிட்டா, உடனே இதுங்களுக்கு சினிமா ஸ்டார்ஸ்தான் நினைப்புல வரும்.''

''தப்பு என் மேலேதான் நந்து. எப்ப கிராமத்துக்குள்ள காலடி எடுத்து வைச்சேனோ, அப்பவே என் டிரஸ்ஸை மாத்திட்டிருக்கணும். இந்தமிடியும் 'டி' ஷர்ட்டும் அவங்களை அப்படி நினைக்க வச்சா, அதுக்கு யார் பொறுப்பு?''

''என்னதான் நீ புடைவை கட்டி, தலைப்பை இழுத்துச் செருகி, தலை முடிய அள்ளி முடிஞ்சிட்டாலும், முகத்துல இருக்கிற பட்டணக் களையை மறைக்க முடியாது இன்பா....''

''என்னை அநாதை விடுதியில் இருந்து எடுத்து வளர்க்கிறதா, எங்க அம்மா தீர்மானம் பண்ணினப்ப கூட, எங்க அப்பா இப்படித்தான் ஏதோ சொன்னாராம். இது மூஞ்சியும், மொகறையும் பார்த்தா எட்டு நாளைக்குச் சோறு வேண்டியிருக்காது போல இருக்கேன்னு.... அப்படி இருந்தவளைத்தான் எங்க அம்மா, இப்படி மாத்தியிருக்கா.''

''காக்கா கூட்டுல குயில் இருக்கும்கற உண்மை, உன்னை வளர்த்த அம்மாவுக்குத் தெரிஞ்சிருக்கு.''

இன்பா மூச்சிரைக்க ஓடி வரும் சிறுவர்களைப் பார்த்து, மெல்லிய பெருமூச்சுடன் சொல்கிறாள்.

''என்னதான் சிறகு முளைச்சுப் பறந்தாலும், குயிலுக்குத் தான் அடைக்கலம் புகுந்த காக்கா கூடு அத்தனை சுலபத்துல மறந்துடாது நந்து. அதனாலதான் அதோட குரல்லே ஒரு வித சோகம் கலந்திருக்கு. ஆனா ஒண்ணு, இப்ப வண்டியைத் துரத்திட்டு ஓடி வர்ற அத்தனை குழந்தைகளையும் ஒழுங்கா குளிப்பாட்டி, நல்ல சட்டை போட்டு என் கூட அழைச்சிட்டுப் போய், 'என் கூடப் பொறந்தவங்க'ன்னு உங்க அப்பாகிட்டே சொன்னா, அப்படியே நம்பிடுவாரு.''

நந்தகுமார் இந்தப் பேச்சை அதிகம் ரசிக்க வில்லை என்பது முகத்திலேயே தெரிகிறது.

அவன் பேச்சை மாற்றுகிறான்.

''அதோ வீடு வந்தாச்சு இன்பா.''

அவன் சொல்லி முடிப்பதற்குமுன், வண்டி ஒரு பெரிய இரும்பு கேட்டைத் தாண்டி உள்ளே நுழைய.....

வண்டி நுழைவதற்காகவே கேட்டைத் திறந்து வைத்தபடி நின்றிருந்த வேலையாள் ஒருவன், வண்டியின் பின்னாலேயே துரத்தி வந்த சிறுவர்கள் கேட்டைத் தாண்டி உள்ளே நுழைந்துவிடாமலிருக்க, அவசரமாய்க் கேட்டை இழுத்து மூட....

இரும்புக்கம்பிகளில் முகம் பதித்து நிற்கும் சிறுவர்களைப் பார்த்த இன்பா, நெஞ்சுக்குள் இனம் புரியாத துக்கம் அடைக்க, விழிகளைத் திருப்புகிறாள்.

பங்களாவின் கம்பீரமான முகப்பு, அவளை அசர வைக்கிறது.

மெள்ள இறங்கியவள் —

தன்னை எதிர் கொண்டழைப்பதற்காக, ஆவலுடன் தன் வயசை மறந்து வேகமாய் நடந்து வரும் மனிதரைப் பார்த்ததும்....

தொண்டைக் குழிக்குள் நெல்லிக்காய் அடைத்துக் கொண்டாற் போல —

விக்கித்து நிற்கிறாள் அவள்.

''இவர்தான் என் அப்பா.''

நந்துவின் வார்த்தைகள் எங்கோ ஒலிப்பது போல.....

தடுமாறி விழப் போனவள், **நந்துவின்** கரத்தை இறுகப் பிடித்துக் கொள்கிறாள்.

(தொடரும்)

**வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.**



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்,
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




B84.55 Tam

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !**

# அவருக்குத் தெரியும் அந்த நன்றி உணர்வு!

எந்தப் பேப்பரைப் பிரித்தாலும் புகழ் மாலைதான் அவருடைய ஓவியக் கண்காட்சியைப் பற்றி. எண்ணி இருபது ஓவியங்கள். எல்லாமே விற்றுப் போய்விட்டன. பணமும் செக்குமாகக் கைக்கு வந்துவிட்டது.

ஏனோ தெரியவில்லை. இன்று மனத்தை வியாபித்திருந்தது ஒரு நன்றி உணர்வுதான்.... இன்பம்? மகிழ்ச்சி? நிறைவு? இவையும் இருந்தாலும் தனியே தூக்கலாக நின்றது நன்றிதான்.

காலைப் பலகாரத்தை முடித்துக் கொண்டு ஒரு டாக்ஸி பிடித்து வங்கிக்குச் சென்று செக்குகளை டெபாஸிட் செய்துவிட்டு வெளியே வந்தபோது அந்தக் காலைப் பொழுதே சட்டென்று மாலையாகிவிட்டது போல் இருள் சூழ்ந்திருந்தது. காற்றில் வேகம். மரங்களின் கிளைகளும் இலைகளும் இசை எழுப்பின. நர்த்தனமாடின.

சட்டென்று மழைத் துளிகள் விழ ஆரம்பித்தன. இங்கொன்றும் அங்கொன்றுமாக. பின் ஒரே சீராக. அவர் வங்கியின் வராந்தாவில் நின்று கொண்டு சாலையைப் பார்த்தார். கட்டடங்கள், மரங்கள் எல்லாமே மழை நீரில் குளித்தெழுந்து மாசு நீங்கிப் பொலிவு பெற துடிப்பது போல் அவருள் ஓர் உணர்வு. தானும் அந்த அனுபவத்தில் ஒன்ற வேண்டும் போல் ஒரு தவிப்பு. அவர் பள்ளிச் சிறுவனைப் போல் ஓடிச் சென்று வீதியில் நின்று கொண்டார். கண்களை மூடிக் கொண்டார். மழை நீரின் ஸ்பரிசம் தந்த பேரின்பத்தை ஆசை தீரப் பருகினார். பின் கண்களைத் திறந்தபோது நாலைந்து சிறுவர்கள். அவரைப் போலவே மழையில் நனைந்து கொண்டிருப்பதைக் கண்டார். அவர்களுடைய சிரிப்பும், இன்பமும் அவருடைய மகிழ்ச்சியின் எதிரொலி போல் இருந்தன. ஒரு முகம் தெரியாத மனிதன் கூடையைக் கவிழ்த்து குடையாக்கி,தலை மேல் போட்டுக் கொண்டு விரைந்தார். ஒருமரத்தடியில்கந்தல்புடைவை அணிந்த ஓர் ஏழைத் தாய் தன் கைக்குழந்தையை அணைத்தவாறு பொறுமையோடு நின்றிருந்தாள்.

அவர் நெஞ்சமெல்லாம் மறுபடியும் அந்த நன்றி உணர்வு வியாபித்தது. ஓர் இளம் பெண்ணின் எழில் முகத்தை மெல்லிய முக்காடு வழியே பார்க்கும் வியப்போடு அவர் உலகைப் பார்த்தார்.....

காலையில் மனித இனத்திடம் அவர் உணர்ந்த காதல் இன்னமும் நெஞ்சை விட்டு நீங்கவில்லை. அதன் சுகத்தைப் பொக்கிஷமாக இதயத்துக்குள் பூட்டி வைக்க வேண்டுமென்று அவர் நினைத்தார். அதைச் சிரஞ்சீவியாக்க ஏதாவதொரு நிகழ்ச்சி. ஒரு காட்சி, கிடைக்காமலா போய்விடும்?

கூட்டம் அலைமோதும் கடைத் தெருவிற்கு நடந்தே சென்றார் அவர். இன்று கூட்டத்தோடு கலந்துவிட வேண்டும். ஐம்பது வயதுக்குள் உலகப் புகழ் பெற்றுவிட்ட ஓவியன் என்ற தம் தனித்துவத்தைக் கழற்றி விட்டுச் சாதாரண மனிதனாக மாறிவிட வேண்டும். அப்போதுதான் அவர் தேடிய பொக்கிஷத்தைக் கண்டெடுக்கலாம். ஏதோ ஓர் அதிசயம் நிச்சயம் நிகழப் போகிறது. அது என்ன, என்ன என்று எதிர்பார்க்கும் இளைஞனைப் போல் அவர் கண்களில் ஆவலை ஏந்தி இங்குமிங்கும் பார்த்தவாறு நடந்தார்.

ஒரு வண்டியைச் சுற்றி மக்கள்.... சூடாகப் பூரி கிழங்கு. மசால் வடை....

நடைபாதையில் தோன்றிய திடீர்க் கடைகள்.... கட்பீஸ் துணிகள், திராட்சைப் பழங்கள், பிளாஸ்டிக் சாமான்கள், வண்ண வண்ணக் கண்ணாடி தம்ளர்கள், ஜாடிகள்...

குழந்தைகளின் கைகளை இறுக்கமாகப் பற்றிக் கொண்டு நெரிசலில் முன்னேறும் தாய்மார்கள்..... துணிப் பைகளைத் தூக்க மாட்டாமல் தூக்கிக் கொண்டு நிதானமாக நடக்கும் முதியவர்கள்.... வண்ண மலர்கள் போல் இளம் பெண்கள்..... அவர்களைக் கண்களாலேயே விழுங்கும் இளைஞர்கள்.

சட்டென்று அவர் நின்றார். இதயமே ஒரு கண ம் நின்று விட்டு மறுபடியும் இயங்கிற்று.

நடைபாதையில் மற்றுமொரு கடை. ஓர் இளைஞன். அவனைச் சுற்றிச் சிறுசிறு ஓவியங்கள். அரையடி அகலம், ஓரடி நீளம், சுற்றி மலிவான மர ஃப்ரேம். ஓவியங்களில் பறவைகள், மிருகங்கள், கோயில்கள், மலைகள், நதிகள், மரங்கள், பெண்கள், புஷ்பங்கள்.....

அவர் ஓர் ஓவியத்தைக் கையிலெடுத்து நிதானமாக ஆராய்ந்தார். இரண்டு பஞ்சவர்ணக் கிளிகள்.... வண்ணங்கள் திட்டாய்த் தனித்தனியே கண்ணை அடித்தன.

நிமிர்ந்து அந்த இளைஞனைப் பார்த்தார். இருபத்தைந்து வயது இருக்குமா? மிஞ்சி மிஞ்சிப் போனால் முப்பது.

நினைவு வழுக்கிக் கொண்டு ஓடிற்று. அதே வயதில் ஓர் இளைஞன். ஓவியக் கல்லூரியிலிருந்து தேர்ச்சி பெற்று வெளியே வருகிறான். இதயம் கொள்ளாமல் ஆசைகள், கனவுகள், தன் ஓவியக் கலையின் மூலம் சமூகத்தையே சீர்திருத்திவிட வேண்டும் என்ற ஜ்வாலை..... இரவு பகலாக உழைக்கிறான். விதம் விதமாக ஓவியங்கள் சிருஷ்டி பெறுகின்றன. ஆனால்....

''என்ன இவை? பார்த்தாலே அசிங்கமாக இருக்கிறது. இவற்றைப் படைத்த ஓவியன் சிறு வயதில் ஏதோ 'ட்ரெளமா'வுக்கு ஆளாக்கியிருக்க வேண்டும்.''

''இவைஓவியங்களா இல்லைசித்திரவதைக் கூடங்களா? கலையில் எத்தனை குரூரம்!

விமர்சனங்கள் இரக்கமின்றித் தாக்கு கின்றன. வறுமை, பசி.... வாழ்க்கை தொடர் கிறது. நெஞ்சில் அந்த ஜ்வாலை மட்டும் அழியவில்லை, குறையவில்லை. கால ஓட்டம் கருணை காட்டுகிறது. 'சித்திரவதைக் கூடங் கள்!' என்று அருவருத்து ஒதுக்கப்பட்ட படைப்புக்கள் இப்போது 'சமூகஉணர்வோடு வரையப்பட்ட நிதர்சனங்கள்!' என்று பெயர் பெறுகின்றன. வறுமையும் பசியும் இறந்த காலத்துக்கே சொந்தமாகின்றன.

அவர் உடலை சிலிர்த்துக் கொண்டார். மற்றுமோர் ஓவியத்தைக் குனிந்து எடுத்தார்.

'பற்கள் தெரியச் சிரிக்கும் ஒரு குழந்தை. சுருள் முடி, வட்ட முகம், இட்டாய்க் கண்ணைக் கூச வைக்கும் அதே வண்ணக் கலவை.

நிமிர்ந்து அந்த இளைஞனைப் பார்த்தார். ''இந்தப் படங்களைப் பெயிண்ட் செய்த ஓவியன் யார்?''

''நான்தான் சார்!'' அவன் கண்களில் சட்டென்று ஓர் ஒளி, குரலில் ஓர் உற்சாகம்.

''இதுதான் உன் தொழிலா?''

''காலையில் பேப்பர் சப்ளை செய்கிறேன் சார். பின் ஒரு கடையில் எடுபிடி வேலை.... மாலையில் ஓவிய வியாபாரம். ஓவியத்தை மட்டும் நம்பினால் சாப்பிட முடியாது சார்!''

அவர் பதில் சொல்லாமல் தலையசைத் தார். தொண்டையில் ஏதோ சிக்கினாற் போல் இருந்தது.

''ஒரு பெயிண்டிங் என்ன விலை?''

''இருபத்தைந்து ரூபாய் சார்.''

''ஓ!''

அவன் அவசரமாக அவரருகே வந்தான். ''உங்களுக்காக மட்டும் இருபது ரூபாய் சார்!''

''இருபதா?'' அவனை நேருக்கு நேர் பார்த் தார் அவர். அவன் கண்களைப் பார்த்தார். அவற்றில் தெரிந்த சோகத்தை, ஆவலைப் பார்த்தார்.

''இதற்கும் குறைவாக விற்றால் கட்டாது சார்!'' அவன் குரலே ஓலம் போல் தொனித் தது.

''இங்கே எத்தனை ஓவியங்கள் இருக் கின்றன?''

''நாற்பது சார். பார்க்கிறீர்களா? சினிமா ஸ்டார்ஸ், நேரு, காந்தி போன்ற தலைவர்கள், புண்ணிய ஸ்தலங்கள், விளையாட்டு வீரர் கள் எல்லாமே வரைந்திருக்கிறேன்!''

''சரி நாற்பதையும் 'பாக்' பண்ணு!''

அவன் கண்கள் மலர அவரைப் பார்த் தான். ''சார், சார் நாற்பதையுமா நீங்கள் காசு கொடுத்து.....''

அவர் மௌனமாகத் தம் பர்ஸைத் திறந்து எட்டு நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவன் கைகளில் வைத்துவிட்டு முறுவலித் தார். ''தாங்க்ஸ் சார். தாங்க்ஸ்.....'' என்று அவன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே தினசரித் தாள்களில் பத்துப் பத்தாய் ஓவியங்களை வைத்துக் கட்டுவதைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

ஒரு டாக்ஸியை நிறுத்தினார். ஏறிக்கொண் டார். அருகே அந்த ஓவியப் பார்ஸல்களை வைத்துக் கொண்டார். நம்பி வந்த சிறு குழந்தையை அணைத்துக் கொள்வதைப் போல அவற்றை அணைத்துக் கொண்டார்.

அந்த இளைஞனின் முகத்தை மறுபடியும் மனக்கண்முன் நிறுத்திப் பார்த்தார். அந்த ஆவல், அந்த எதிர்பார்ப்பு, அந்த மகிழ்ச்சி, அந்த நன்றி.....

அவருக்குத் தெரியும் அந்த நன்றி உணர்வு எத்தகைய பொக்கிஷம் என்று! காலை யிலிருந்தே உணர்ந்து வருகிறாரே! இனி அதன் சுகம் அவருடைய இதயத்தில் வாழும், சிரஞ்சீவியாக, இதயம் இயங்கும் வரை....



''நீங்கள்தான் தோட்டக் கலையில் போன்ஸாய் முறையில் மரம் வளர்க்கும் நிபுணராமே! நிஜமா?''

''தலா ஆயிரம் ரூபாய் வீதம் நூறு பேருக்கு லட்ச ரூபாய் கடன் அளிக்கப் போவதாக அறிவித்துவிட்டு இப்ப நூறு ரூபாய்வீதம்பத்துபேருக்குதானே கொடுத் தீங்க! என்ன ஆச்சு மீதிப் பணம்?''

''கடன் வழங்கு விழா செலவுக்கு யார் அழுவதாம்?''






# பிலிப்ஸ்

## பிலிப்ஸ் டிசைன் செய்துள்ளதென்றால் அதை ஒவ்வொரு அம்சத்திலும் காணலாம்.






**சீரான அமைப்பு, எழில்மிகு தோற்றம்**
நேர்த்தியும் கம்பீரமும் இணைந்த உறுதிமிக்க பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர், கச்சிதமானதும் உபயோகத்திற்கு எளிதானதும் ஆகும்.



**உபயோகத்திற்கு மிக எளிதானது**
இரண்டு ஜார்கள்—திரவ பதார்த்தங்களுக்கென ஒரு உறுதிமிக்க ஸான் பிளாஸ்டிக் ஜார்; அரைப்பதற்கென ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார். ஒவ்வொன்றும் தனித்தனியாக இணைக்கப்பட்ட பிளேடுகளுடன்

**பல உபயோகங்கள்**
அரைத்தல், கலத்தல், நறுக்குதல், பிழிதல், ப்ளெண்டிங் மற்றும் விப்பிங் போன்ற வேலைகள் செய்ய 3-4 நிமிடங்களே தேவை. இதில் சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார் உள்ளது. மூன்று அடிப்படை சுழல் வேகங்களுக்கென ரோட்டரி ஸ்விட்ச் மற்றும் உங்களுக்குத் தேவைப்படும் சரியான சுழல் வேகத்தைப் பெற 'இஞ்ச்சிங்' சௌகரியம் கொண்டது.

அம்சத்துக்கு அம்சம் இது உயர்தரமானதாகும். தவிர, நாடெங்கும் பரவலாக விற்பனைக்குப் பின் பிலிப்ஸ் வழங்கும் சர்வீஸ் வசதியின் பின்பலம் கொண்டது.

CLARION/B/P/168/203 TAM

## பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர்

**பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



## தாய்ப்பால் ஊட்டுவது உங்களது குழந்தைக்கு ஆகாரச்சத்தைவிட அதிக சத்தை அளிக்கிறது. குழந்தைக்கு உணர்ச்சி பூர்வ பாதுகாப்பையும் தருகிறது.



தாய்ப்பால் ஊட்டுவது தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள பாசப் பிணைப்பை நேச உணர்வை மேலும் வலுவாக்குகிறது. ஆம்! இயற்கையாகவே தாய் அன்பை வெளிப்படுத்தும் வழியே இதுதான். அதனால் குழந்தை மன நலத்தோடும் மகிழ்வோடும் வளர்கிறது.

தாய்ப்பால் குழந்தைக்கு ஏற்ற சரிவிகித உணவாகும். அதில் குழந்தைக்கு தேவையான புரதச்சத்துக்கள் அனைத்தும் தேவையான விகிதத்தில் அடங்கியுள்ளது.

தாய்ப்பால் ஊட்ட தவறாதீர்கள். இயற்கையின் நியதி அது. உங்கள் குழந்தையின் விருப்பமும் அதுவேதான். தவிர்க்க முடியாத காரணங்களால் தாயின் உடல் நலம் பாதிக்கப் பட்டாலோ அல்லது தாய்ப்பால் குறைந்து விட்டாலோ—விஜயா ஸ்ப்ரே பயன்படுத்துங்கள், பரிசோதிக்கப்பட்ட மற்றும் நம்பகமான குழந்தை உணவு.

விஜயா ஸ்ப்ரே அடைக்கப்பட்டுள்ள டின்களில் உங்கள் குழந்தைகளின் உடல் நலம் காக்கும் ஆலோசனைகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றை கவனத்தில் கொண்டு குழந்தையின் உடல் நலத்தை பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

குழந்தைகளின் நலனில் அக்கறை கொண்டு வெளியிட்டோர் ;
விஜயா ஸ்ப்ரே தயாரிக்கும் ஆந்திர பிரதேஷ் டெய்ரி டெவலப்மெண்ட் கோ ஆப்பரேடிவ் பெடரேஷன் லிமிடெட்.

AKSHARA 227 86 APD (Tam)

# கடல் நீர் எத்தனை குடம்?

கையில் குடங்களோடு ஐந்தாறு பேர் கடலை நோக்கிப் போகிறார்கள். அவர்களிடையே —

சோழவரம் பந்தயத்திற்குப் போவது போன்ற சுறுசுறுப்பு. முந்திக் கொண்டு போக வேண்டும் என்ற முரட்டு நீதி. பிந்திப் போனால் கிடைக்காதோ என்ற பீதி.

ஒருவரை ஒருவர் இடித்துக் கொண்டு ஓடுகிறார்கள். ஒருவரை ஒருவர் தடுத்துக் கொண்டு ஓடுகிறார்கள்.

போட்டியிட்டுக் கொண்டு போய்க் கொண்டிருப்பவர்களின் மனசுகள் பக்கத்திலிருப்பவர்களைப் 'பற்றி'ப் புகைந்து கொண்டிருக்கின்றன:

''இந்தக் கடலுக்கு வருவதற்கு இவனுக்கென்ன உரிமை இருக்கிறது?'' என்றொருவன் குமுற,

''எவனுடைய அப்பன் பேர் இதில் எழுதியிருக்கிறது?'' என்று ஒருவன் சீற,

''ஆரம்ப நாட்களிலிருந்தே நான் அறிமுகமானவன்'' என்றொருவன் உரிமைக் கொடி உயர்த்த,

''ஆனந்தக் கடலின் அந்தரங்கக் காதலன் நானல்லவா?'' என்றொருவன் ஆர்ப்பாட்டம் செய்ய,

''இந்தத் திமிர் பிடித்தவனை இழுத்தெறியுங்கள்'' என்றொருவன் திமிர,

குடங்கள் ஒன்றை ஒன்று குட்டிக்கொள்கின்றன. மணலில் ஓரிருவர் மல்லாந்து விழுகிறார்கள். ஒருவரை ஒருவர் உதைத்துக் கொள்கிறார்கள்! அடாவடித்தனமான அடிதடி சண்டை.

சட்டென்று சண்டை நிற்கின்றது. திடுக்கிட்டு எல்லாரும் திரும்பிப் பார்க்கிறார்கள். கடல் நீரைக் குடங்களில் நிறைத்துக் கொண்டு இரண்டு பேர் அவசர அவசரமாக வந்து கொண்டிருக்கிறார்கள்.

''அடடே! எங்களுக்கும் முன்னால் அல்லவா இவர்கள் வந்திருக்கிறார்கள்'' என்று நினைத்தபடி,

''கடலுக்கு நீங்கள் எப்போது வந்தீர்கள்?'' என்று இவர்கள் அவர்களைக் கேட்கிறார்கள்.

''நீங்கள் கண் விழிக்கும் முன்பே நாங்கள் கடலுக்கு வந்துவிட்டோம்'' என்று வந்தவர்கள் பதில் சொல்கிறார்கள்.

''இதுவரை எத்தனை குடம் வீட்டிற்குக் கொண்டு போய் இருப்பீர்கள்?'' என்றொருவன் ஏக்கத்தோடு கேட்கிறான்.

''நான் இதுவரை முப்பத்தாறு குடம் தண்ணீர் எடுத்துப் போயிருக்கிறேன். இவன் இருபத்தாறு குடம்'' என்றொருவன் பதில் சொல்கிறான்.

''அடடா! அடடா!'' என்று அலறிக் கொண்டு ஐந்தாறு பேரும் அவசர அவசரமாகக் கடலை நோக்கி ஓடுகிறார்கள்.

ஓடும்போது ஒருவன் சத்தமிடுகிறான்: ''போனால் போகிறது. புதிதாக எவனும் புகுந்து விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்!''

ஐந்தாறு பேரும் கடல்நீரைத் தங்கள் கைக்குடங்களில் நிரப்பிக் கொள்கிறார்கள். வேகவேகமாக வீடுகளை நோக்கி விரைகிறார்கள்.

கரையில் ஒருவன் கதறிக் கொண்டிருக்கிறான்! கவிழ்த்து வைத்த குடம் அவன் தலையில் காட்சியளிக்கிறது. அழுது கொண்டிருப்பவனைப் பார்த்துக் காரணம் கேட்கிறேன். கண்களைக் கசக்கியபடி அவன் சொல்கிறான்:

''என்னை நெருங்கவிடமாட்டேன் என்கிறார்கள். எல்லாத் தண்ணீரையும் இவர்களே எடுத்துப்போய்விடுவார்கள் போலிருக்கிறது. என்ன செய்வதென்றே தெரியவில்லை. என் எதிர்காலம் என்ன ஆகும்?''

அவனுக்கு ஆறுதல் சொல்கிறேன்:—

''காத்திருக்கும் இளைஞனே! கவலைப் படாதே. வாய்ப்பு உனக்கும் வரும். இவர்கள் எத்தனை குடம் தண்ணீரை எடுத்துக் கொண்டு போனால் என்ன? எத்தனை நாள் எடுத்துக் கொண்டு போனால் என்ன? எத்தனை பேர் சேர்ந்து எடுத்துக் கொண்டு போனால் என்ன?

''கடல் நீரை ஒரு நாளும் காலி செய்ய முடியாது!''



## மடியில் விழுந்த மாங்கனி!

# மாண்புமிகு முதலமைச்சர்

கோவி.மணிசேகரன்

ஆலய வழிபாடு நிறைகிறது.

கோயில் அதிகாரிகள் புடை சூழ, வெளியே வருகிறார் இராமதேவர். அனைவருக்கும் கரம் கூப்பி விடைபெறுகிறார்.

சற்றே காலார நடந்து வந்த இராமதேவர், என்ன நினைத்தாரோ, நின்று திரும்பி, கோபுரத்தைக் கவனிக்கிறார்.

எத்தனையோ கோயில்களைத் தரிசித்தவர் அவர். இந்த சின்னஞ்சிறு கோயிலில் அப்படி என்ன பென்னம் பெரிய மகத்துவம் இருக்கக் கண்டு பட்டத்தரசி தியாகவல்லி தேவியார் அனுப்பி வைத்தார்? ஏதோ ஒரு மகத்துவத்தைக் கண்டிருக்க வேண்டும். எனவேதான் கேட்டுக் கொண்டார் போலும்!

''திருநாகேச்சுரா!'' என்று கூறி, கரங்களிரண்டையும் கோபுரம் போல் உயர்த்தி வணங்குகிறபோது......

''ஜோதீச்சுரா!'' என்று ஒரு பெண்ணின் குரல்.

எங்கிருந்து கேட்டது இந்தக் குரல்?

திரும்பிப் பார்க்கிறார், சுற்றும் முற்றும் பார்க்கிறார்.

எங்கு நோக்கினும் ஆண்களும் பெண்களும் போவதும் வருவதுமாக.....

யாரோ ஒரு பக்தை இப்படி அழைத்துக் குரல் கொடுத்திருக்க வேண்டும்....

நாகேச்சுரன் ஜோதி வடிவானவன் தானே? கயிலை மலையானை திருமலையானை எப்படி அழைத்தால் என்ன?

மேலே நடக்கிறார்....

இடுப்பில் பொன்னிழை வேய்ந்த பட்டாடை; மேலே சிவந்த பட்டுத் துண்டு; நெற்றியில் சிவச் சின்னம்.

இந்த அலங்காரத்தில் இராம தேவர் இருந்தாலும், அவருள் ஒளிந்து பிரகாசிக்கும் ஜோதி மயமான அழகைக் கண்டு, பேதை முதல் பேரிளம் பெண் வரையிலான ஏழு பருவங்களும் ஏங்கிக் கவனிக்கும் அழகல்லவோ அவரது அழகு?

ஆணழகின் கம்பீரம்தானே அழகுக்கு அழகு செய்து கிரீடம் அணிவிப்பது?

தோகை விரித்து அகவும் மயில், பிடரி சிலிர்த்துக் கர்ஜிக்கும் சிங்கம், கிளைகிளை பாய் கொம்புகளையுடைய கலைமான்....

எத்தனையோ எடுத்துக்காட்டுகள்....

''வணக்கம்! நான் ஜோதி!''

செங்கோட்டியாழின் செந்தமிழ்க் குரல்...

சிந்தனையின் பிடரி, சிலிர்த்து விழித்துக் கவனித்தபோது.....

சிருங்கார ரசத்து ஒட்டு மொத்த குத்தகைக் காரியான, கோயில் சந்நிதானத்தில் கண்ட ஜோதி, தாள் பணிந்து, தமிழைப் பணிந்து எழுகிறது.

ஒகோ..... ரேவதி நட்சத்திரமா?

இப்போது நன்றாகவே உற்றுக் கவனிக்கிறார் இராம தேவர்.

ஜோதி என்கிற பெருந் தத்துவப் பெயர் கேற்ப ஜோதியழகு....

வீதியுலா புறப்படும் வேல் விழியரின் ஜாதியழகு.....

கோதிலா அழகு....

பாதி பரமனுக்களித்து மீதியே தானுகி நின்ற பார்வதியின் அழகு....

நேற்று, ஒட்டக்கூத்தரின் மாணவர் தண்டி....

ஆடாத தோகை, அலராத புண்டரிகம், பாடாத பிள்ளைப் பசுங் கிள்ளை, சூட்த் தளிராத சூதம், தழையாத வஞ்சி, குளிராத



திங்கள் குழவி, அளிகள், இயங்காத தண்கா, இறக்காத தேறல், வயங்காத கற்பகவல்லி, தயங்கு இணர்க்கூழைச் சுருள் முடிக்கக்கூடுவதும் கூடாதாம் ஏழைப் பருவத்து இளம் பேதை.....

என்று அடுக்கிச் செல்லச் செல்ல வியந்து போய் ''நன்றாகப் பாடியிருக்கிறீர்கள்'' என்று இராம தேவர் சொல்ல, ''நான் பாடியதல்ல; என் ஆசான் ஒட்டக்கூத்தர் அடுத்துப் பாட இருக்கும் 'குலோத்துங்கன் சோழன் உலா'வில் சில வரிகள்'' என்று தண்டி கூறி அயர்த்திய வரிகள்.....

இதோ கண்முன்னே உயிர்பெற்று எழுந்து வந்தன போல......

ஆ. இது நிழலான அழகல்ல; அழலான அழகு.....!

"ஜோதி! நீ ரேவதி நட்சத்திரத்துக்கு ஏன் அர்ச்சனை செய்தாய்? உனது நட்சத்திரமா?"

''இல்லை உங்கள் நட்சத்திரம்.''

''என்னைக் கண்டதும் இப்படிச் செய்யத் தோன்றியதா?''

''இல்லை; உங்களை அறிந்தவள்; தெரிந்து கொள்ளப் புறப்பட்டவள்; எனவே உங்கள் பேரில் அர்ச்சனை செய்துவிட்டு, கங்கை



கொண்ட சோழபுரம் நோக்கிப் புறப்பட இருந்தேன். ஆனால் நாகேச்சுரர் உங்களேயே இங்கு வரவழைத்துவிட்டதுதான் ஆச்சரியம்.

''நான் வந்திருக்கும் செய்தி......''

''நேற்றுதான் தஞ்சையில் கேள்விப்பட்டேன். நான் புறப்பட்டது என்னவோ குன்றத்தூருக்கு! அது சரி..... இங்கேயே நின்று பேச வேண்டுமா? உங்கள் சிறப்பை நான் குறைப்பதாக எண்ணுகிறேன். போவார், வருவார் கவனிப்பில்.....''

''நானே சொல்ல இருந்தேன். அதோ அந்தத் தோப்பில் பேசுவோம். என்னைச் சந்திக்க வேண்டும் என்றே புறப்பட்டு இருக்கிறாயே! அதன் காரணத்தை நான் அறிய வேண்டாமா?''

இருவரும் தோப்புக்குள் நுழைகிறார்கள்.

ஒரு பெரிய மாமரத்துக் கனத்த வேர் பாகத்துக்கு மேல் அமர்ந்து கொள்கிறார் இராம தேவர்.

கால்களில் அணிந்திருந்த சிலம்புகள் இனி தொலிக்கப் பின்தொடர்ந்து வந்த ஜோதி தரையில் அமருகிறாள்.

இராம தேவருடைய பொன்னிற ஒளியும், ஜோதியின் பிரகாசமும் இணைந்து அந்த மாமரத்தையே பொன் மரமாக்கிச் சிலிர்ப்பு கண்டதன் காரணமோ, என்னவோ, 'தொப்' பென்று இராம தேவருடைய மடியில் பொன்மயமாய்ப் பழுத்த மாங்கனி ஒன்று விழுந்தது.

விதிர்த்துப் போனார் இராம தேவர்.

விக்கித்துப் போனாள் ஜோதி.

இது எந்தச் சகுனத்தைக் காட்டுகிறது?

மாங்கனியைக் கையில் எடுத்த இராம தேவர், ''மன்னன் மடியில் விழ வேண்டிய மாங்கனி, என் மடியில் விழுந்து இருக்கிறது'' என்றார்.

ஜோதி 'களுக்' கென்று சிரிக்கிறாள். திருத்தொண்டர்களில் ஒருவரான ஆனயனார் வாசித்த புல்லாங்குழலில் இருந்து தெறித்த சுரங்கள் போல் தெரிந்தது அந்தச் சிரிப்பு.

''ஜோதி! நீ சொல்ல வேண்டியதைச் சொல்லலாம். நேரத்தோடு நான் கங்காபுரி சொல்ல வேண்டும்.''

''தமிழ்ச் செல்வமே! முதலில் நான் யார் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். மதுரையின் புகழ் பெற்ற ஆடலரசி ஜோதி!''

இமைக்க மறந்தார் இராம தேவர்.

ஆ! இவள்தான் அந்த ஜோதியா? சுந்தரர் தமிழைத் தவிர வேறு எவர் தமிழிலும் சுகம் இல்லை என்று கூறும் சொப்பன சுந்தரி இவள் தானோ?

ஈசன் திருவிளையாடல்களையும், அவனது அடியார்கள் கதைகளையும் நாட்டு மக்களுக்கு நாட்டியத்தால் உணர்த்தும் நாட்டிய நாயகி இவள் தானோ?

பாண்டியன் வேண்டியும் அவையில் ஆட மறுத்த பாவை இவள்தானோ?

வினவும் வியப்பும் விழிகளில் வெடிக்கக் கவனிக்கிறார் இராம தேவர்.

''சிவத் தொண்டு செல்வியே! உன்னைச் சந்தித்ததில் ஜீவன் இனிக்கிறது! என்னை எப்படி அறிந்தாய்? ஏன் தேடி வந்தாய்?''

''உங்களை அறியாமல்தானா நான் புறப்படுகிறபோது பாண்டிய அரசர் வேண்டிக் கொண்டார்?''

''பாண்டியர் வேண்டிக் கொண்டாரா?''

''நீங்கள் பாண்டிய நாட்டு முதல் அமைச்சர் பதவி ஏற்பதானால், ராஜ்யத்தையே உங்கள் பாதங்களில் வைக்க ஆயத்தமாக இருப்பதைச் சொல்லச் சொன்னார். சொல்லச் சொன்னார் என்றுதான் சொன்னேன். ஏற்பதும் மறுப்பதும் உங்கள் விருப்பம். நானும் அதற்காக வரவில்லை. உங்கள் பெருமை மதுரைவரை பரவி இருக்கிறது என்பதற்காகத்தான் சொன்னேன்! கொஞ்ச நாட்களுக்கு முன் நீங்கள் மேற்கொண்ட கோயில் பயணத்தில், கல்வெட்டு ஆராய்ச்சிப் பயணத்தில் பேசிய சொற்பொழிவுகள் அரசியல் புரட்சி நிறைந்தனவாக இருந்ததென்று மக்கள் பேசிக் கொள்கிறார்கள். இல்லையென்றால் ஓங்கு தமிழ்ச் செருக்கர் ஒட்டக்கூத்தர் உங்கள் இல்லம் நாடி வந்திருப்பாரா? பொன்னி வள நாட்டுப் பூபதியாம் சோழ மாமன்னர் யானைப் பாகனாக அமர்ந்திருப்பாரா? உங்களை நானறியாமல் எவ்விதம் இருப்பேன்?''

''நீ புறப்பட்டு வந்ததன் காரணம்?''

''உங்களைத் தரிசிக்க வேண்டும். பேசிய பெருமை அடைய வேண்டும். வாய்ப்பு எங்கேனும்கிடைக்குமானால்எனதுநாட்டியத்தைக் கண்டு நீங்கள் ரசித்துப் பாராட்ட வேண்டும். வேறொன்றும் அறியேன் பராபரமே!''

''இப்போது நேரே மதுரைக்குச் செல்கிறாயா?''

''இல்லை கங்கை கொண்ட சோழபுரத்துக்கு.''

''என்னைப் பின்தொடர்ந்தா?''

''ஆமாம்; எனது நாட்டியத்தை நீங்கள் காணும் சந்தர்ப்பம் ஏற்படுகிறவரை பின் தொடர்ந்து கொண்டே இருப்பேன். இனி எனது ஊர் மதுரையல்ல; யாதும் ஊரே, யாவரும்கேளிர் என்கிற நிலைக்கு வந்துவிட்டவள். பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியையே எனது நாட்டியமாகக் கொண்டு விட்டவள். அந்தத் தொண்டர் சீர் பரவ, சோழ நாட்டில் தங்குகிறேன். சுவாமி! இப்படி அழைக்க எனக்கு அனுமதி கொடுங்கள். கணவனைத்தான் இப்படி அழைக்க வேண்டும் என்பதில்லை; கடவுளையும் அழைக்கலாம்; கனிந்த மகான்களையும் அழைக்கலாம் அல்லவா?''

''நன்றாகவே பேசுகிறாய் ஜோதி!''

''என் நாவில் இருப்பவர் சுந்தரர்.''

மலைத்துப் போனார் இராம தேவர். அவர் நாவிலிருப்பவரும் சுந்தரராயிற்றே!

''சுவாமி! இன்றிரவு என் கையால் உணவு படைக்க நீங்கள் உண்ணுகிறீர்கள்.''

''ஜோதி!''

''மறுக்க வேண்டாம். சுந்தரர் மீது ஆணை.''

''மறுக்கவில்லை ஜோதி! தொண்டர் சீர் பரப்பும் ஒரு தோகை வீட்டில் உண்பது எனது பாக்கியம். நீ எங்கிருப்பாய் என்று தேடி வருவேன்!''

''உங்களைத் தேடி வருமாறு செய்கிற பாவத்துக்கு நான் ஆளாக மாட்டேன். எனது தோழி வல்லரசி உங்களைத் தேடி வந்து அழைத்து வருவாள்.''

மனக் குகையில் எங்கோ ஒரு சிறு சலனம் தொடங்கி, மெல்ல மெல்லக் கனத்து வியர் வைத் துளிகளை அரும்பச் செய்கிறது.

ஈச்சுரா! இது என்ன அறத் துன்பம்?

''என்ன யோசிக்கிறீர்கள் சுவாமீ!''

''ஜோதி! ஒன்றை நினைவுபடுத்துவேன். என்னைச் சுந்தரர் தமிழோடு இணைத்துப் பார்! அவரது வாழ்க்கையோடு இணைத்துப் பாராதே! என் கதை எங்கு தொடங்குகிறது என்பது எனக்கே தெரியாது!''

''ஆனல் என் கதை எங்கு தொடங்கப் போகிறது என்பது எனக்குத் தெரியும். புறப் படுவோம்!''

அவள் ரேவதி நட்சத்திரமாய்ச் சிரிக் கிறுள்.

''ஏன் சிரிக்கிறுய் ஜோதி?''

''நானும் ரேவதியே! இன்று என் பிறந்த நாள். எனவேதான் உணவுக்கு அழைத்தேன். ஒப்புக் கொண்டதற்கான மகிழ்ச்சிச் சிரிப்பு!''

''நான் நினைத்தேன். என் வாழ்த்துக் கள்!'' என்று கூறிய இராம தேவர், கையி லிருந்த மாங்கனியை நீட்ட, அதனை அன்பு டன் பெற்றுக் கொள்கிறுள் ஜோதி.

இருவரும் இருவேறு திசையில் நடந்தனர். இரண்டு பல்லக்குகளும் கங்கை கொண்ட சோழபுரம் நோக்கிப் புறப்பட்டன.

**பொ**ழுது விடிந்தால் ஒட்டக்கூத்தர் நூலுக்கான அரங்கேற்றம். அந்த அரங் கேற்றப் பணிகள் சுறுசுறுப்பாக நடை பெற்றுக் கொண்டிருந்தன.

இரவு பூத்தது: விளக்குகள் கண் விழித் தன.

திருநாகேச்சுரம் சென்று திரும்பிய இராம தேவரைக் கண்டு விசாரித்தாள் பட்டத்தரசி தியாகவல்லி.

ஜோதி அனுபவத்தைத் தவிர மீதி அனு பவத்தை எடுத்துரைத்தார் இராம தேவர்.

தியாகவல்லியும், இனி உங்கள் வாழ்வில் பொலிவும் வலிவும் திருவும் வந்து அடையும். என்னை நீங்கள் வாயார வாழ்த்தத்தான் போகிறீர்கள்!'' என்று கூறி விடை பெற்றுச் சென்றுள்.

வல்லரசியின் வருகைக்காகக் காத்திருக் கிறுர். நேரம் கடந்து இந்த வல்லரசி வரக் கூடாதே என்கிற அச்சம் அவரை ஆட்டிப் படைத்தது. ஏன் ஒப்புக் கொண்டோமோ?

சிவத் தொண்டர்கள் அறுபத்து மூவரும் நின்று சொன்ன சாட்சியமோ இந்த ஒப்பு தல்?

இந்த நேரம் பார்த்துத்தானு ஒட்டக்கூத்தர் வரவேண்டும்?

இனிய முகத்துடன் இராம தேவர் வர வேற்கிறுர்; அமரச் செய்கிறுர்.

''இராமதேவரே! இன்றிரவு எனது இல்லத் தில் உங்களுக்கு விருந்து'' என்றுர் ஒட்டக் கூத்தர்.

அந்த விருந்தினர் மாளிகை வெடிப்புண் டது போன்ற அதிர்ச்சி.

பெருமானே! இது என்ன சோதனை?

என்ன மறு மொழி கூறுவது என்று புரியா மல் தவித்தார் இராம தேவர்.

(தொடரும்)

## வேணு சீனிவாசன்

கடந்த தீபாவளி அன்று சென்னையில் பெரும் மழை, வெள்ளம். அரசுத் துறை செய்வதறியாது இருந்த சமயத்தில் தொழிலதிபர் ஒருவர் தம் தொழிலகத்தின் கான்டீனுக்கு விரைந்தார். பல்லாயிரக்கணக்கான உணவுப் பொட்டலங்களைத் தயாரிக்கச் செய்தார். அவை தண்ணீரில் நனைந்து விடாமல் இருக்க, ஸ்பேர் பார்ட்ஸ்களைப் பாதுகாக்கும் விலை உயர்ந்த பாலிதீன் கவர்களை உருவி அவற்றில் பொட்டலங்களை வைத்துப் பாதிக்கப்பட்ட ஏழை மக்களுக்கு வினியோகிக்கச் செய்தார். இந்த நல்ல காரியத்தை எந்தவிதமான விளம்பரமும் தேடாமல் செய்த சுந்தரம் க்ளேடன் நிர்வாகத் தலைவர் வேணு சீனிவாசனுக்கே என் 'பத்மஸ்ரீ' பட்டம்.

— வி. உஷா, சென்னை — 33.

## ஜெயபாலன்

பரோடா ORG யில் கம்ப்யூட்டர் ப்ராஜெக்ட் மானேஜராக விளங்கும் ஜெயபாலன் அவர்களுக்கே பத்மஸ்ரீ பட்டம் கொடுப்பேன். இந்த முப்பது வயது இளைஞர் கடினமான கம்ப்யூட்டர் ப்ரோக்ராமில் சம்பந்தப்பட்ட திட்டங்களை எளிதுபடுத்துவதுடன் குறிப்பிட்ட காலக் கட்டத்திற்குள்ளாகவே அவற்றைச் செயல்படுத்தியும் காட்டுகிறார். சுமார் முப்பது மணி நேரம் பிடித்த ஒரு 'புரோக்ராம்' அதே வேலையை 27 நிமிடங்களுக்குள் செய்து முடிக்குமாறு திருத்தி அமைத்தார். இதனால் ஆண்டுக்கு இரண்டு லட்சம் ரூபாய் செலவு மிச்சமாயிற்று! தமக்குக் கீழ் வேலை பார்க்கும் எல்லோரையும் தம்மைப் போலவே ஒரு தேனீயின் சுறுசுறுப்புடன் இயங்க ஊக்குவிப்பவர் இவர்.

— சி. தமேந்திரன், ஆவுடையனூர்.




# பத்மஸ்ரீ

## டானியல் குணநிதி

எங்கள் மாவட்டக் கலெக்டர் டானியல் குணநிதி பதவியேற்ற நாள் முதலாகப் பல பணிகளால் எங்களை மகிழ்வித்து வருகிறார். வேலூரில் நடைபாதைக் கடைகளை அகற்றி, போக்குவரத்துக்கு வழி செய்தார். மூங்கில் மண்டி தீப்பிடித்தபோது ஏழு மணி நேரங்கள் பக்கத்தில் இருந்து தீயணைப்புப் பணியில் பங்கு கொண்டார். மக்களின் குறைகளை உடனுக்குடன் களைந்து வருகிறார். கார் செல்ல முடியாத கிராமங்களுக்கெல்லாம் சைக்கிளில் சென்று மக்களைச் சந்திக்கிறார். இவருக்கல்லவா பத்ம ஸ்ரீ கொடுக்க வேண்டும்.

— கே.வி.எஸ். மணியன், குடியாத்தம் (வ.ஆ. மாவட்டம்)

## லக்ஷ்மி ராஜாராம்

மூன்று அனாதைக் குழந்தைகளுடன் ஆரம்பிக்கப்பட்ட காட்டாங்குளத்தூர் சிவானந்த சரஸ்வதி சேவாச்ரமம் இன்று பல இலங்கை அகதிகளின் குழந்தைகள் உட்பட ஆயிரக்கணக்கான குழந்தைகளைப் பராமரித்து வருகிறது. அக்குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொண்டு அவர்களுக்கு நல்லொழுக்கமும் சுத்தமும், அறிவும், பக்தியும் கற்பித்து வரும் லக்ஷ்மி ராஜாராமின் சமூக சேவைக்கு நிச்சயம் பத்ம ஸ்ரீ கொடுத்துக் கௌரவிக்கலாம்.

— ஏ. கௌரி, செங்கல்பட்டு.

## ரஹ்மத் கான்

மதுரை மாவட்டம் கொடைக்கானல் ரோட் முதல் கவுஞ்சி வரை எத்தனை அபாயமான பயங்கரமான வளைவுகள் இருப்பினும் அந்த 'ரூட்'டில் இதுவரை ஒரு விபத்துக்கூட நேராமல் பஸ் ஓட்டி வரும் டிரைவர் ரஹ்மத் கானுக்குத்தான் என் பத்ம ஸ்ரீ. தன் ஐம்பது வருட அனுபவத்தின் துணையோடு பொறுமையும் திறமையும், சாமர்த்தியமும் உடையவராய்த் திகழும் ரஹ்மத் கான் தனியார் கம்பெனி பணியாளர்.

— ஏ.பி. கான், பெரியகுளம்.

## வி. ஆர். கிருஷ்ண அய்யர்

கேரள அமைச்சரவையில் மந்திரி பதவி முதல் உச்சநீதி மன்ற நீதிபதி பதவி வரை பல பொறுப்பான பதவிகளை வகித்தபோதிலும் சற்றும் கர்வமோ அதிகார தோரணையோ இல்லாத மனிதர் நீதிபதி வி.ஆர். கிருஷ்ண அய்யர் "சமூக நீதியும் ஜனநாயக உரிமைகளும் மனித குலத்திற்குக் காற்றும் நீரும் போன்றவை — அவற்றைப் பாதுகாக்க இறுதி













ஸ்ரீநிவாஸ்



வரை போராடுவேன்'' என்று கூறும் கிருஷ்ணய்யரைவிட பத்மஸ்ரீக்குத் தகுதியானவர் யார் இருக்க முடியும்?

— கே. மைதிலி, மதுரை—7.

### பி. ஏ. கன்னையா

எங்கள் ஊரில் உள்ள பாபநாசம் தொழிலாளர் சங்கத் தலைவர் பி.ஏ. கன்னையாவே நான் பத்மஸ்ரீ பட்டம்வழங்கத்தேர்ந்தெடுக்கும் நபர். பாமரர்கள் நிறைந்த ஊரில் ஒரு தொழில் சங்கம் அமைத்து, அரசியல் சார்பற்ற நிலையைக் கடைபிடித்து, தமக்கென்றுபதவிகளை நாடாமல், மதுரை கோட்ஸ் நிறுவனத்துடன் போராடி வாரிசு அடிப்படையில் எங்களுக்கு வேலை வாங்கிக் கொடுத்து, கூட்டுறவு பண்டகசாலை, உயர்நிலைப் பள்ளி ஆகியவற்றை நிறுவி, தமக்கென்று வாழாமல் பிறருக்காகவே உழைத்து வரும் இந்த வழக்கறிஞர் இப்பட்டத்திற்கு எல்லா விதத்திலும் தகுதியுடையவர் ஆவார்.

— ஏ. தங்கராஜ், விக்ரமசிங்கபுரம்.

### மாண்டலின் ஸ்ரீநிவாஸ்

சிறு வயதிலேயே சங்கீதத்தில் பழுத்த கனியாக விளங்கும் மாண்டலின் ஸ்ரீநிவாஸுக்குத்தான் பத்மஸ்ரீ கொடுக்க வேண்டும். ராக ஞானமும், மாண்டலின் வாத்தியத்தைக் கையாளும் அபாரத் திறனும் ஒருங்கே அமையப் பெற்று, துரித காலங்களை மழை போல் பொழிகிறாரே, அதற்காகப் பத்மஸ்ரீயை இவருக்குக் கண்ணை மூடிக் கொண்டு கொடுக்கலாம்.

— எஸ். வி. நாகராஜன், திருச்சி—14.

### ராமகிருஷ்ண ஹெக்டே

தொடர்ந்து மூன்று முறை (மூன்று ஆண்டுகளில்) முதலமைச்சராகப் பதவி வகித்ததற்கும் இந்த மூன்று ஆண்டுகளில் இரண்டு முறை தார்மீக அடிப்படையில் பதவி விலகியதாலும், இந்தியாவின் ஏனைய அரசியல்வாதிகளினின்று வேறுபட்டுத் தன்னிகரற்று ஒளிவீசும் இராமகிருஷ்ண ஹெக்டே அவர்களுக்கே நான் பத்மஸ்ரீ பட்டம் வழங்குவேன்.

— ச. வெங்கடேசன், புதுவை—7.

### மயூரி சுதா சந்திரன்

வாழ்வில் வந்த மாபெரும் இன்னல்களைக் கண்டு மனம் தளராமல், எதிர் நீச்சல் போட்டு, தமக்குப் பச்சாதாபம் தேவையில்லை என்று உறுதிப்படுத்தி, தன் போன்று ஊனமுற்றோர் பலருக்கு 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்று முன்னோடியாக இருந்து எடுத்துக் காட்டி, படிப்பு, பரதம், சினிமா எல்லாவற்றிலும் பிரகாசிக்கும்..... ஆமாம் சுதா சந்திரன் தான் நான் பத்மஸ்ரீக்குத் தேர்ந்தெடுக்கும் நபர்.

— பிரியா ரத்னம், சென்னை—102.

### பிச்சுமணி

நான் வசிக்கும் பகுதியில் இருபது வருடங்களுக்கு முன் பல காலனிகள் உருவாயின. ஆனால் பள்ளி வசதி இல்லை. அப்போது பிச்சுமணி என்பவர் தீர்க்க தரிசனத்துடன் அரும்பாடுபட்டு உருவாக்கிய இரண்டு பள்ளிக் கூடங்களில் இன்று மூவாயிரம் குழந்தைகள் படித்துப் பயன் அடைகிறார்கள். இப்பொழுது ஒரு கல்லூரி அமைக்கவும் கோயில் கட்டவும் திட்டம் உருவாக்கியுள்ளார் பிச்சுமணி. கல்விக் கண் திறக்க உதவிய பிச்சுமணிக்குப் பத்மஸ்ரீ கொடுத்தால் என்ன?

—கே. என். ராமச்சந்திரன், பம்பாய்—55.

### கிரிக்கெட் ஸ்ரீராமன்.

தமிழ்நாடு கிரிக்கெட் சங்க அமைப்பில் கடந்த 42 ஆண்டுகளாக ஈடுபட்டு 31 ஆண்டுகளாக அதன் கௌரவ காரியதரிசியாகத் திறம்படப் பணியாற்றி, தற்சமயம் அகில இந்திய கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டின் தலைவராகப் பொறுப்பேற்றிருக்கும் ஸ்ரீராமன் அவர்களுக்குப் பத்மஸ்ரீ பட்டம் அளிப்பதில் பெருமை கொள்கிறேன். தமிழ்நாடு கிரிக்கெட்டின் வளர்ச்சியில் அவர் பங்கு மிகவும் போற்றுதற்குரியது.

— ஆர். ஸ்ரீனிவாச ராகவன், கோவை.

### திருக்குறளார்

எனக்கு அதிகாரம் இருந்தால் திருக்குறளார் வி. முனுசாமிக்குப் பத்மஸ்ரீ வழங்கி மகிழ்வேன். திருக்குறளைப் பொதுமேடைகள் வாயிலாகப் பாமரர்க்கும் எடுத்துரைத்து வருகிறார். நகைச்சுவை கலந்து நல்ல சிந்தனைகளைப் பரப்புகிறார்.

— டி. எஸ். பாலு, சென்னை—41.

### கே. அப்பாக்குட்டி

காந்தியத் தொண்டர், விளம்பரம் நாடாதவர், தமிழகத்திலுள்ள பல்லாயிரம் ஏழை, எளிய, அனாதைக் குழந்தைகளுக்கு வேதாரண்யத்தில் கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலத்தின் மூலமும் தாயுமானவர் வித்யாலயக்

தின் மூலமும் நன்மைகள் பல செய்து வருபவர். இங்கு பயின்று வரும் மாணவ மாணவியருக்குத் தொழிற் பயிற்சியும் கொடுத்து, சொந்தக் காலில் நிற்கச் செய்பவர் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய வே. அப்பாக்குட்டி ஆவார். இவருக்கே என் பத்மஸ்ரீ விருதை வழங்குவேன்.

— ஆர். ஜானகிராமன், வேதாரண்யம்.

**சந்திரகாந்தி கோவிந்தராஜுலு**

கோவை கிருஷ்ணம்மாள் கல்லூரி உள்பட, ஏராளமான பள்ளி, கல்லூரிகளைப் பல்வேறு இடங்களில் துவக்கி, பெண்களின் அறியாமை எனும் இருளை அகற்றும் பணியில் ஈடுபட்டுள்ள சந்திரகாந்தி கோவிந்தராஜுலு அவர்களுக்குக்கண்டிப்பாக பத்மஸ்ரீ கொடுக்க வேண்டும் என்பது என் விருப்பம்.

— கே. ராஜன், சத்தியமங்கலம்.



**வி. ஐ. பி. சூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**கே. ராஜன்,**
**162, P.V. பிள்ளை வீதி,**
**சத்தியமங்கலம்**
***— 638 401.***

## அருள் வாக்கு



**பா**ற்கடலைக் கடைந்தபோது முதலில் விஷம் வந்தது; அப்புறம்தான் அம்ருதம் வந்தது. கடைந்து கடைந்து முதலில் அதிலிருக்கிற கெட்டதை எல்லாம் விஷ ரூபத்தில் திரட்டி வெளிப்படுத்திய அப்புறந்தான், நல்லதான அம்ருதம் வந்தது. நம்முடைய வாழ்க்கையையும் ஸம்ஸாரத்தையும் இப்படிக் கடைய வேண்டும். தன்னாலே அது அலை அடித்துக் கொண்டிருப்பதுதான். காம க்ரோதாதிகளான பல சலனங்களால் அது அலை வீசிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதற்குள்ளேயே ஈச்வரதத்துவமும் அம்ருதம் போல் இருக்கத்தான் செய்கிறது. இந்த ஸம்ஸாரக் கடலை நன்றாகக் கடைந்து காம க்ரோதாதிகள் விஷமாகத் திரண்டு வெளியே போகும்படி செய்துவிட்டால், அப்புறம் திவ்ய அநுபவம், ஈச்வர ஸாக்ஷாத்காரம் என்கிற அம்ருதம் வந்துவிடும். முதலில் கெட்டதை எல்லாம் திரட்ட வேண்டும். எதற்காக என்றால் வைத்துக் கொண்டு அநுபவிப்பதற்காக அல்ல; வெளியிலே துரத்துவதற்காகத்தான். குப்பையை எல்லாம் ஒரு இடமாகப் பெருக்கித் திரட்டி வெளியிலே கொட்டுவது போல! அப்படி வெளியிலே துரத்துகிறவரை கெட்டதுகள் இருக்கத்தான் செய்யும்; அவற்றை பகவானே மத்தாக வந்து ஒன்றாகச் சேர்த்து ஒரு இடத்தில் **concentrate** செய்து (திரட்டிக்) கொடுக்கிறான். பூஜை, க்ஷேத்ராடனம், ஸ்தோத்ரம் படிப்பது, ஜபம், த்யானம், என்கிற ஸாதனையெல்லாம் பகவானின் அநுக்ரஹ ஸ்வரூபம்தான். இப்படிப்பட்ட ஸாதனைகளால் வாழ்க்கைக் கடலைக் கடைந்து முதலில் விஷத்தைத் திரட்ட வேண்டும். பிறகு அதை வெளியே அனுப்பி விட வேண்டும். அப்புறம் அம்ருதத்தை அடைய வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**




# அடுத்த முறை, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள் குடும்பத்தைக் காத்திடுங்கள்.




## ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.

WPL/25 35

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்; ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி. விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.







IS:10633

VANASPATI

# ஸன்ஃப்ளவர்

ப்ராண்ட் வனஸ்பதி

இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD - *Closer to the consumer*

# கிழக்கே ஓர் உலகம்



• ஸிட்னி — ஒரு பறவைக் கண்ணோட்டம்.

## 15

### ஸிட்னி
### —கண்கொள்ளாக் காட்சி

ஸிட்னியில் நான் தங்க ஹோட்டல் காஜிபோ என்ற ஐந்து நட்சத்திர ஹோட்டலை ஆஸ்திரேலிய செய்தித் துறை ஏற்பாடு செய்திருந்தது. ஹோட்டல் நகரத்தின் மையப் பகுதியில், ஸிட்னியின் புகழ் பெற்ற துறைமுகத்தின் அருகில் கிங்ஸ்க்ராஸ் பாட்ஸ் பாயின்ட் என்ற பகுதியில் இருக்கிறது.

ஸிட்னிக்குப் போய்ச் சேருமுன்பே இந்தப் பகுதியின் பிராபல்யம் என் செவிக்கு எட்டியிருந்தது. 'கிங்ஸ் க்ராஸ் அருகில் இருக்கும் சில தெருக்கள் விபசாரத்திற்கும், போதைப் பொருள் அடிமைகளுக்கும், ஹோமோ செக்ஷுவல் காரர்களுக்கும் பெயர் போனவை. ஜாக்கிரதை! ஜாக்கிரதை!' என்று நண்பர்கள் ஃபீஜியில் எச்சரித்திருந்தார்கள்.

என்னை விமான நிலையத்திலிருந்து ஹோட்டலுக்கு அழைத்துப் போக வந்த காமன் வெல்த் கார், எனக்கு இளைப்பாற*நேரம் கொடுத்து)என்னை ஆஸ்திரேலிய செய்தித் துறை அலுவலகத்துக்கு அழைத்துச் செல்ல மீண்டும் சொன்ன நேரத்துக்கு வந்தது.

மேற்கு நாடுகளில் உள்ள நகரங்களைப் போல் பிரும்மாண்ட விண்ணை முட்டும் கட்டிடங்களும் பெரிய சாலைகளுமாக ஸிட்னி அழகிய நகரமாக விளங்குகிறது. பின்னணியில் துறைமுகமும், இரு கரைகளை இணைக்கும் பாலமும் ஆப்பரா ஹௌஸும் கண் கொள்ளாக் காட்சி.

கார் டிரைவர் சற்று வயசானவராகத் தெரிந்தார்.

"மிக அழகாக இருக்கிறது'உங்கள் ஊர்" என்றேன்.

"ஆ. அதைப் பற்றிச் சந்தேகமில்லை மேடம். நன்றி": என்றார் அவர். "ஆனால் இதைவிட நன்றாக இருக்கலாம் அல்லவா?"

அவருடைய பதில் எனக்கு விநோதமாக இருந்தது. ஆனால் அடுத்த ஏழு நாட்கள் நான் ஸிட்னியில் பார்த்துப் பேசிய எல்லா ஆஸ்திரேலியர்களுமே எந்த விஷயத்தைப் பற்றியும் அதிகமாகப் பெருமைப்பட்டுக் கொள்வதில்லை என்பதைக் கவனித்தேன். கூச்சமில்லாமல் தங்களது பலவீனங்களையும் குறைகளையும் ஹாஸ்ய உணர்வோடு சொன்னார்கள்.

காமன்வெல்த்கவர்ன்மெண்ட்ஸென்டரின் பதிநான்காம்மாடியில் இருக்கும் செய்தித் துறை அலுவலகத்தை நான் அடைந்தபோது செய்தித்துறை பிரதமக் காரியதரிசி ஸ்டுவர்ட் வாலஸ் என்னை ஆர்வத்துடன் வரவேற்றார். என் விருப்பங்களை முன்பே கேட்டறிந்திருந்த அலுவலகம் மறுநாளிலிருந்து ஒரு நெருக்கமான நிகழ்ச்சி நிரலை எனக்காகத் தயாரித்திருந்தது.

"இன்றைக்குச் சற்று இளைப்பாறுங்கள்" என்றார்.

"ஹோட்டலுக்குச் சென்ற பிறகு பாட்ஸ் பாயின்ட் பகுதியில் கொஞ்சம் காலாற நடக்கலாம் என்று நினைக்கிறேன்" என்றேன்.

அரை விநாடி வாலஸின் முகத்தில் கலவரம் தெரிந்தது. மெல்லிய புன்னகையுடன், "இவ்வளவு அதீத வீரத்தை நீங்கள் காட்ட வேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்று அறிவுரை வழங்கினார். "நீங்கள் எங்



* ஸிட்னி — காங்கிரீட் கட்டிடங்களுக்கிடையே ஆங்காங்கே ஓய்வு கொள்ள வசதியான இடங்கள் உண்டு. அப்பகுதிகளில் பசுமையான சூழ்நிலையும் உருவாக்கியுள்ளனர்.

**வாஸந்தி**

கள் விருந்தாளி. உங்களுக்கு ஏதாவது இக்கட்டு ஏற்பட்டால் எங்களுக்குத் தர்ம சங்கடமாகப் போகும்.''

கார் வரை என்னுடன் வந்த வாலஸ் டிரைவரிடம் மிகத் தோழமையுடன், ''ஹாய் ஜான்! எப்படியிருக்கிறாய்?'' என்று கேட்டு, ''உனக்குக் கொஞ்சம் நேரமிருக்குமா ஜான்? மேடம் வாஸந்தியை ஹோட்டலில் இறக்குவதற்கு முன் 'ராக்ஸ்' பக்கம் சுற்றிக் காண்பிக்க முடியுமா?'' என்றார் மிக மரியாதையாக.

''ஷ்யூர்! நோ ப்ராப்ளம்'' என்றார் ஜான்.

டிரைவர் ஜான் உற்சாகமாகச் சீட்டியடித்துக் கொண்டே காரைச் செலுத்தினார். ஸிட்னி துறைமுகப் பட்டினமாக இருந்தாலும் சாலைகள் எல்லாம் மலைப்பாங்கான பகுதியில் இருப்பதுபோல் மேலும் கீழுமாக ஏறி இறங்கிச் சென்றன.

''இந்த இடத்துக்குத்தான் 'ராக்ஸ்' (பாறைகள்) என்று பெயர்'' என்றார் ஜான்.

ஒரு புராதன க்ல் கட்டிடம் தெரிந்ததே ஒழியப் பாறைகள் எங்கேயும் காணவில்லை.

''எதற்கு இந்த இடத்துக்கு 'ராக்ஸ்' என்று பெயர்?'' என்று நான் கேட்டேன்.

''முதன்முதலில் ஆங்கிலேயர்கள் கைதிகளுடன் இந்தக் கண்டத்திற்கு வந்தபோது இங்கெல்லாம் செம்மண் பாறைகள் இருந்ததாம். இதைத் துறைமுகப்பட்டினமாகக் கட்ட உத்தேசித்துப் பாறைகளை உடைத்துக் கட்டிடங்களை எழுப்பிவிட்டார்களாம்.''

கடலும், நூற்றுக்கணக்கான படகுகளும் கப்பல்களும், மையத்தில் பாய் மரங்கள் விரித்த பிரும்மாண்ட படகு போன்ற உருவம் கொண்ட ஆப்பரா ஹவுஸும் நெஞ்சைப் பரவசப்படுத்தின.

''நாளைக்கு ஆப்பரா ஹவுஸின் உள்ளே சென்று பார்ப்பீர்கள். அப்போது இன்னும் பிரமித்துப் போவீர்கள்'' என்றார் ஜான்.

மாலையில் ஃபீஜி இந்தியர் ஒருவர் (லோகேசன் பிள்ளை) தம் மைத்துனர் லொட் டேர்க்காவிலிருந்து ஃபோன் பண்ணி என்னைக் கவனித்துக் கொள்ளச் சொன்னதாகத் தெரிவித்து, ''இரவு எங்கள் வீட்டில் உங்களுக்குச் சாப்பாடு. அழைத்துப் போக வந்திருக்கிறேன்'' என்றார்.

''எனக்குப் பிற்பகலிலிருந்து உடம்பு சரியில்லை. அலைச்சல்தான் காரணமாயிருக்க வேண்டும்'' என்றேன்.

''அப்படியானால் நீங்கள் ஹோட்டலில் இருக்க வேண்டாம். எங்களுடன் தங்கி விடுங்கள்'' என்றார்.

ஃபீஜி இந்தியர்களின் அன்பு என்னைத் தொடர்ந்து வந்தது எனக்குத் தெய்வாதீனமாகத் தோன்றிற்று.

லோகேசன் தம்பதிகள் இளைய வயசுக்காரர்கள். பத்து வயசில் பையனும் ஏழு வயசில் பெண்ணும் இருக்கிறார்கள். ஃபீஜியில் இந்தியர்களுக்கு எதிர்காலம் இல்லை என்கிற எண்ணத்தில் ஆஸ்திரேலியாவிற்குக் குடிபெயர்ந்து வந்துவிட்டார்களாம். லோகேசன் ஏதோ சின்ன பிஸினஸ் செய்கிறார். மனைவி சுபத்ரா நர்ஸாக வேலை பார்க்கிறார். மூன்றே வருஷத்தில் ஸிட்னியின் ஒரு நல்ல பகுதியில் நான்கு பெட்ரூம் கொண்ட பெரிய வீட்டை வாங்கியிருக்கிறார்கள். கப்பலைப் போல கார்; மற்றும் பல வசதிகள்.

''நன்றாக உழைத்தால் இங்கே முன்னேறுவது சுலபம்'' என்றார் லோகேசன். ''சொந்த வீடு வாங்க ஆஸ்திரேலிய அரசு ஊக்குவிக்கிறது. இலவசமாக 7,000 டாலர்கள் கொடுத்து உதவுகிறது. அதற்கு மேல் அதிக வட்டியில்லாத கடனும் கொடுக்கிறது'' என்றார்.

மறுநாள் காலை வாலஸ்ஸுக்கு நான் திடீரென்று இடம் மாறினதற்கான காரணத்தைத் தெரிவித்துவிட்டு நிகழ்ச்சி நிரலின் படி நான் சந்திக்க வேண்டியிருந்த மிஸ் பாட் ஓ'ஷேனைப் பார்க்கப் போனேன்.

இவர் பழங்குடி மக்கள் நலன் துறையின் காரியதரிசி. பல பெண்மணிகள் என்னைச் சந்திக்க வசதியாக ஒரு சின்ன தேநீர் விருந்து ஏற்பாடு செய்திருந்தார். அவர்களில் சிலர் பழங்குடி மக்கள். வேறு சிலர் பெண் விடுதலை இயக்கத் தீவிரவாதிகள். அங்கிருந்த

பழங்குடிப் பெண்கள் படித்தவர்கள். நல்ல உத்தியோகத்தில் இருப்பவர்கள்.

பொதுவாக அவர்கள் எல்லாரும் வெகு காரசாரமாக ஆஸ்திரேலிய ஆதிவாசிகளின் கலாசாரத்தை ஆங்கிலேயர்கள் எப்படி நசித்துவிட்டார்கள் என்பதை விவரித்தார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட மொழிகளைக் கொண்ட ஆதிவாசிகளின் கலாசாரம் 40 00 வருஷம் பழைமையானது என்றார் பாட் ஓ ஷேன். இங்கு வந்து சேர்ந்த ஆங்கிலேயர்களுக்கு ஆதிக்கம்தான் குறியாக இருந்தது. பல்வேறு ஆதிவாசிகளின் பலதரப்பட்ட கலாசாரத்தைப் பற்றியோ அவர்களிடையே இருந்த நுட்பமான சமன்பாடுகளையோ உணராமல் அவர்களை வெறும் காட்டுமிராண்டிகளாகப் பாவித்தார்கள். பல பிரிவினரைப் பூண்டோடு அழித்தார்கள். மற்றவர்களைத் தங்கள் சட்டத்தின் கீழ் வித்தியாசம் பாராமல் கூட்டுச் சேர்த்தார்கள். ஆதிவாசிகளின் மரபுகளுக்கு இது ஒரு கொடூர அதிர்ச்சியாக இருந்தது. அந்த அதிர்ச்சியிலிருந்து அம்மக்கள் இன்றுவரை முழுவதுமாக விடுபடவில்லை.

"இப்போதும் சில ஆதிவாசிகள் முன்னேறாமலேயே இருக்கிறார்களாமே?" என்று நான் கேட்டேன்.

"நாம் முன்னேற்றம் என்று நினைப்பது உண்மையில் முன்னேற்றம்தானா? உன் நாட்டில் சில பகுதிகளில் மாறுதலை விரும்பாத பழங்குடி மக்கள் இருக்கிறார்கள். அந்த நிலையே அவர்களுக்குத் திருப்தியளித்தால் இருந்துவிட்டுப் போகட்டுமே! மேற்கத்திய கலாசாரம்தான் மேம்பட்டது, முன்னேறியது என்று நாம் ஏன் நினைக்க வேண்டும்?" என்றார் ஒரு பெண்மணி.

"ஜனத் தொகையில் ஆதிவாசிகள் எத்தனை சதவீதம் இருக்கிறார்கள்?"

"ஒரு சதம்தான்! ஆதிவாசிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தச் சில வருஷங்களாக அரசு முயன்று வருகிறது. ஆனால் முயற்சி போதாது."

தீவிரப் பெண் விடுதலை இயக்கத்தைச் சேர்ந்தவர்களும் ஆண் ஆதிக்கம் கொண்ட அரசைத் திட்டினார்கள். பெண்கள் எத்தனை திறமையுள்ளவர்களாக இருந்தாலும் உச்சத்தை எட்டவே முடியாது என்றார்கள். "ஒரு ஆஸ்திரேலியப் பெண்மணி பிரதம மந்திரியாக வருவதைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது."

**வெ**ளியில் ஸ்டுவர்ட் வாலஸ் காத்திருந்தார். ஸிட்னி ஆப்பரா ஹவுஸைச் சுற்றிப் பார்க்கவும் பிறகு அதன் புகழ் பெற்ற பெனிலாங் ரெஸ்டாரண்டில் மதிய உணவுக்குச் செல்லவும் ஏற்பாடாகியிருந்தது.

வாலஸிடம், "ஆஸ்திரேலியப் பெண்கள் இத்தனை ஆக்ரோஷத் தீவிரவாதிகளாக இருப்பார்கள் என்று நான் நினைத்திருக்கவில்லை" என்றேன்.

"ஓ, நோ, எல்லாப் பெண்களும் அப்படியில்லை. உதாரணமாக என் மனைவி ஜேன் அந்த இயக்கத்தின் திசைக்கே போக மாட்டாள். தன் சுதந்திரம் எந்தவிதத்திலும் குறையாடப்பட்டதாக அவள் நினைக்கவில்லை" என்றார் வாலஸ்.

இதுவரை தொலைவிலிருந்தே நான் பார்த்துப் பிரமித்த ஸிட்னி ஆப்பரா ஹவுஸை அடைந்தவுடன் அதன் கம்பீர அழகு என்னை அசத்திற்று.

(தொடரும்)

# வளமுடன் நலமாய் அனைவரும் வாழ

# கிரௌன் காயகல்பம்

இளமையும் வலிமையும் இறைவனின் அருட்கொடைகள்! இளமையில் ஆரோக்கிய வலிமையை முறையோடு பாதுகாத்தால் முதுமையிலும் வாழ்க்கையை இளமை உணர்வோடு சுவைக்கலாம்!

மனிதன் என்றென்றும் இளமை உணர்வோடு வாழப் பண்டைய சித்தர்களின் அரிய கண்டுபிடிப்புதான் காயகல்பம்! 'காயகல்பம்' என்றால் வெறும் செக்ஸ் டானிக் மட்டும்தான் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். இது தவறான கருத்து. காயமாகிய உடலை நெடுங்காலம் (கல்பகாலம்) ஆரோக்கியமாக வாழ வைக்கும் அமிழ்தம் என்று காயகல்பத்திற்குப் பொருள்கொள்ள வேண்டும். ஆறிலிருந்து அறுபதுவரை அனைவரும் வலிவோடும் பொலிவோடும் வாழ்வதற்கு அவசியமான பல்மூலிகை மருந்துகளும் தங்கம் வெள்ளி முதலிய நவலோகப்பற்பங்களும், காயகல்பத்தில் அடங்கி இருக்கின்றன. பெய்கின்ற மழையின் தன்மை ஒன்றுதான் என்றாலும் அதனை ஏற்றுக்கொள்ளும் நிலங்களின் இயல்புக்கேற்ப விளைவுகள் மாறுபடுகின்றன அல்லவா! அதைப்போலவே, காயகல்பத்தை உட்கொள்கிறவர்களின் வயதிற்கும் இயல்பிற்கும் ஏற்ப காயகல்பம் அவரவர்களின் உடற் கூறுகளுக்கு தக்கவாறு இயங்கி ஆரோக்கியமான விளைவுகளை ஏற்படுத்துகிறது! காயகல்பத்தின் சிறப்பியல்புகளைச் சுருக்கமாகக் கூறுவதென்றால்

- வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு வலிமையும் கொழுமையும் ஊட்டும்!
- நலிந்தும் மெலிந்தும் நோஞ்சான்களாகவுள்ள இளைஞர்களுக்கும், யுவதிகளுக்கும் உடலில் வலிவும் பொலிவும் மிளிரச் செய்யும்
- அலுத்து, சலித்து விரக்தி அடைந்துள்ள தத்தளிக்கும் நடுத்தரவயதினருக்கு வாழ்க்கையில் புதிய சுவையும் புத்துணர்வும் அளிக்கும்
- நாள்முழுதும் அலுவலகப் பணிகளில் ஈடுபட்டு உடலும் உள்ளமும் ஓய்ந்து சோர்ந்த உழைக்கும் நிர்வாகிகளுக்கு இழந்த வலிமையை எளிதில் ஈடுகட்டும்!
- முதுமையில் ஏற்படுகிற வாய்வுக் கோளாறுகள், மலச்சிக்கல், சீரணக் கோளாறுகள் முதலியவைகளைச் சீர்படுத்தும்
- குறிப்பிட்ட வியாதிகளுக்காக அல்லோபதி மருந்துகள் உட்கொள்ளும் போது துணைமருந்தாக காயகல்பத்தையும் சேர்த்து சாப்பிடலாம். உதாரணமாக, சீரிழிவிற்கான அல்லோபதி மாத்திரைகளுடன் உடல் வலிமைக்காகக் காயகல்பமும் உட்கொள்ளலாம்
- எப்பொழுதும் எல்லோரும் சுறுசுறுப்பாக இயங்கி வாழ்க்கையில் முன்னேற ஆக்கமும், ஊக்கமும் அளிக்கும். எல்லாக்காலங்களிலும், எந்த நேரத்திலும், எல்லோருக்கும் ஏற்றது காயகல்பம்! பத்தியம் எதுவும் இல்லை!

**125 கிராம், 500 கிராம் ஆகிய அளவுகளில் எல்லா இடங்களிலும் கிடைக்கிறது.**

★★★★★★★★★★★★★★★★★
காலை 10.00 மணிமுதல் 12.00 மணிவரை, மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை மருத்துவ ஆலோசனையை நேரிலும், தபால் மூலமும் பெறலாம்.
★★★★★★★★★★★★★★★★★

**தயாரிப்பாளர்கள்:**

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**
55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை,
சென்னை-600 002

**தமிழக விநியோகஸ்தர்கள்:**

**கிரௌன் பார்மசூட்டிகல் ஏஜென்ஸிஸ்,**
2, சுப்பராய முதலி தெரு, புதுப்பேட்டை,
சென்னை-600 002

**கிரௌன் மார்க்கெட்டிங் என்டர்பிரைசஸ்,**
2, சுப்பராய முதலி தெரு, புதுப்பேட்டை,
சென்னை-600 002

CHP/K/1/86

''அப்பா!''

''என்ன நரேஷ்?''

''நான் உங்களை டிஸ்டர்ப் பண்றேனா?''

''இல்லே, சொல்லு.''

நரேஷின் முகம் வழக்கம் போல் இல்லை. அதில் ஏதோ ஒரு விஷயத்தின் பரபரப்பு இருந்தது. அவரெதிரே வந்து உட்கார்ந்தான்.

''அப்பா நீங்க ராஷ்மியைப் பத்தி என்ன நினைக்கறீங்க?''

''பீடிகை போட்டுப் பேசாமல் சுருக்கமாச் சொல்.''

''ஓ. கே. நான் ராஷ்மியைக் காதலிக் கிறேன்.''

''அப்புறம்?''

''அவளை நான் கல்யாணம் பண்ணிக் கணும்னு.....''

''ஓ!''

அரவாமுதம் வாசித்துக் கொண்டிருந்த தினசரியை மடித்து டீபாயின் மீது வைத் தார். மகனை உற்றுப் பார்த்தார். இதற்குச் சிந்தனை தேவைப்படுகிறது என்பது போல் சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்தார். அவர் இருபது வருட காலமாய் சினிமாத் துறையில் மேக் அப் தொழில் செய்து வரு கிறார். ஓரளவுக்குப் படித்திருக்கிறார். அவருக்கு ஒரே மகன்தான் நரேஷ். பணத் திற்கு எந்தவித குறையும் இல்லை என்பதால் அவனை வசதியாகவே வளர்த்து வந்தார்.

# அவனை மறக்க முயன்று...

இந்துமதி



அது மட்டுமே அன்றி எடுத்ததெற்கெல்லாம் அவனை அதட்டவோ, கண்டிக்கவோ அவர் ஒரு போதும் விரும்பியதில்லை. மாறாக ஒரு நண்பனைப் போல அவனிடம் பழகி வந்தார். இதுவே தன்னிச்சையில் செயல்பட அவனுக்குச் சுதந்திரத்தைத் தந்தது. இப்போதும் அவருக்கு ஆத்திரமோ கோபமோ வரவில்லை.



நிதானமாய்க் கேட்டார்:

''இப்படியொரு முடிவுக்கு நீ எப்ப வந்தே?''

''எப்பவோதான்.''

''எப்பவோன்னு?''

''அவளோட பழக ஆரம்பிச்சதிலிருந்து...''

''அதாவது அவளோட டென்னிஸ் ஆட ஆரம்பிச்சதிலேருந்து. அதாவது முன் கூட்டியே அவளை நீ எனக்கு அறிமுகப்படுத்தி வைச்சதிலிருந்து. ஆம் ஐ ரைட்?''

''ஆமாம்பா.''

''அப்ப, நீ இதைத்திட்டவட்டமா காதல்னு சொல்றே?''

''ஒய் நாட்?''

''சரி. இது அவளோட அப்பா அம்மாவுக்குத் தெரியுமா?''

''தெரியும். அவங்க வீட்டில் எப்பவோ சம்மதம்னு சொல்லிட்டாங்க. நீங்கதான் சொல்லணும்.''

''நானும் இதுக்கு எதிர்ப்பு சொல்லப் போறதில்லை. ஆனால் முன்கூட்டியே சில விஷயங்களைத் தெரிஞ்சுக்கணும்னு விரும்பறேன்.''

''உங்களுக்குத்தான் அவளைப் பத்தி எல்லாம் தெரியுமேப்பா. போன மாசம்கூட அவள் பிறந்த நாள் அன்றைக்கு நாம ரெண்டு பேரும் அவள் வீட்டுக்குப் போயிட்டு வந்தோமே.''

''அது சரி. எதுக்கும் உன் தரப்பிலிருந்தும் சில விஷயங்களைத் தெரிஞ்சுக்கிறது நல்ல தில்லையா? அதனாலேதான் கேட்கிறேன். அவகிட்டே உனக்கு என்ன அம்சம் பிடிச்சிருக்கு?''

''என்னப்பா அப்படி கேட்கறீங்க? பார்க்க அழகா அம்சமா இருக்கா. படிச்ச பொண்ணு. ஸ்போர்ட்டிவ் கேர்ள். கௌரவமான குடும்பம். இதையெல்லாம் நான் சொல்லணுமா? இப்படியொரு பெண்ணை மருமகளா அடையறதுக்கு நீங்கதான் கொடுத்து வைச்சிருக்கணும்.''

''ரியலி?''

''பின்னே? நான் எவ்வளவு ஆர்வமா இருக்கேன். நீங்க என்னப்பா இன்னும் முடிவைச் சொல்லாம பத்திரிகை நிருபர் மாதிரி என்னை மூச்சு முட்ட கேள்வி கேட்டுக்கிட்டிருக்கீங்க.''

அவர் லேசாய் முறுவலித்தார்.

''பெஸ்ட் ஆப் லக்.''

நரேஷ் அப்பாவுடன் கேரம் போர்ட் விளையாடிக் கொண்டிருந்தான்.

''ராஷ்மி பிரமாதமா விளையாடுறாப்பா.''

''நிஜம்மா?''

''நீங்க அவகிட்ட தோத்துப் போயிடுவீங்க தெரியுமா?''

''பெட் கட்டறியா?''

சரியான அந்த நேரத்தில்தான் போன் ஒலித்தது. நரேஷ் ஓடிச் சென்று ரிசீவரை எடுத்தான்.

''ஹலோ!''

''..........''

''ஆமாம். நான் நரேஷ் பேசறேன்.''

''............''

''என்ன?''

அதுவரையில் பிரகாசமாய் இருந்த அவனது முகம் சரேலென இருட்டிப் போயிற்று. அவனையும் அறியாமல் கத்திவிட்டான்.

''ராஷ்மி......!''

அப்பா விரைந்து சென்று மகனைப் பதற்றத்துடன் விசாரித்தார்.

''என்ன நரேஷ்? என்ன ஆச்சு?''

''அப்பா..... ராஷ்மி தீ விபத்தில் மாட்டிக்கிட்டாளாம்பா! வீட்டில் இருக்காளாம். வாங்கப்பா போய்ப் பார்ப்போம்.''

இருவரும் அப்போதே விரைந்தனர். அவர்கள் அங்கு சென்றபோது ராஷ்மியைக் கூடத்தில் கிடத்தியிருந்தார்கள். அவள் முகம் முழுதும் தீக்காயங்களுடன் கறுத்துப் போயிருந்தது. தலையில் ஒரு கட்டு போடப்பட்டிருந்தது. நரேஷுக்கு அவளைப் பார்க்க ஒரு பக்கம் மனசு வேதனையாக இருந்தாலும் இன்னொரு பக்கம் அருவருப்பாகவும் இருந்தது.

டாக்டர் தனது பணியில் தீவிரமாக இருந்தார். அவளுக்கு நரம்பு ஊசி ஒன்றைப் போட்டுவிட்டு, ''அரை மணி நேரம் கழிச்சு வந்து பார்க்கறேன். அதுக்குள்ளே ஏதாவது அவசரம்னு போன் பண்ணுங்க'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

ராஷ்மியின் கண்கள் இன்னமும் மூடியே இருந்தது. அவளது அப்பாவும் அம்மாவும் அருகே உடைந்து போய் நின்றிருந்தனர். நரேஷ் அம்மாவை மெதுவாக விசாரித்தான்.

''எப்படிங்க இது நடந்தது?''

அம்மா கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டு சொன்னாள்: ''ஸ்டவ்வை பத்த வைச்சுட்டுக் கவனபிசகா வத்திக் குச்சியை கீழே போட்டுட்டா. அது அப்படியே பாலிஸ்டர் புடைவையில பட்டு, அவ செயல்படறதுக்குள்ள கபகபன்னு தீ பிடிச்சுடுச்சு. நாங்களும் வீட்டில் இல்லாம போயிட்டோம். அவளும் தன்னால் முடிஞ்ச வரைக்கும் எவ்வளவோ கத்திப் பாத்திருக்கா. அவளது துரதிருஷ்டம் யார் காதுலேயும் விழலே.''

''உள் காயம் ஏதும் இல்லேயே?''

''கழுத்துக்குக் கீழே, பின்னாலே எல்லாம் காயம்தாம்பா.''

''டாக்டர் என்ன சொல்றார்?''

''குணம் ஆயிடும்னுதான் சொல்றார். ஆனா இந்தப் புண்ணெல்லாம் ஆறுகிறதுக்கு எவ்வளவு நாள் ஆகுமோ? அதுவரைக்கும் இவ படற அவஸ்தையெல்லாம் பார்த்துக்கிட்டிருக்கணுமா நான்? அங்கங்கே கறுப்பா, தழும்பு வேறே இவளை அசிங்கப்படுத்தி வைச்சிருக்கு.'' அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

ஆராவமுதம் ஆறுதல் சொன்னார்: ''கவலைப்படாதீங்கம்மா. எல்லாம் நல்லபடியா நடக்கும்.''

நரேஷ் எதிலும் நாட்டமின்றி உடைந்த மனத்துடன் உட்கார்ந்திருந்தான்.

''இதுக்கெல்லாம் ரொம்ப 'டிப்ரஸ்ட்' ஆயிடாதே நரேஷ்'' என்றார் அப்பா. ''இப்ப அவள் எப்படியிருக்கான்னு போய்ப் பார்த்தியா?''

''இல்லேப்பா.''

''ஏன்?''

''இனிமேல்தான் போய் பார்க்கணும்.''

''இது நல்லா இல்லேயே நரேஷ். அவளை நீ பார்த்து ஒரு வாரத்துக்கு மேல் ஆயிப் போச்சுன்னு நினைக்கிறேன். அவள் மேல் உயிரையே வைச்சுக்கிட்டிருந்த நீ இப்போ தான் அவளை நல்லா கவனிச்சுக்கணும்.''

''நான் என்னப்பா பண்ணப் போறேன். நான் என்ன டாக்டரா?''

''என்ன ஒரு மாதிரியா பேசறே? அவளுக்கு உடம்புதான் அங்கங்கே கறுத்துப் போச்சே தவிர உள்ளம் மட்டும் உனக்காக இன்னமும் ஏங்கிக்கிட்டுத்தான் இருக்கு. 'எங்கே நரேஷ்?' ன்னு அம்மாவைக் கேட்டுக்கிட்டே இருக்காளாம். சீக்கிரம் அவளைக் கல்யாணம் பண்

---

**இன்றைய மார்க்சிஸ்ட் ஊழல் பேர்வழிகளின் கவனத்துக்கு:**



முன்னாள் காஷ்மீர் மன்னரும், முன்னாள் மத்திய அமைச்சருமான டாக்டர் கரன்சிங் மாணவராக இருந்த நேரத்தில், அவரது தந்தை ஹரி சிங் காலமானார். உடனே மாணவர் கரன் சிங் மன்னரானார். காஷ்மீர் மன்னர் என்ற முறையில் அவர் காஷ்மீர் பல்கலைக் கழகத்தின் வேந்தராகவும் பொறுப்பு வகித்தார்.

காஷ்மீர் மன்னராகவும், பல்கலைக் கழக வேந்தராகவும் இருந்த கரன் சிங், காஷ்மீர் பல்கலைக் கழக மாணவராகவும் இருந்து தனது பட்டப் படிப்பை முடித்தார். மன்னர் என்ற முறையிலேயோ, வேந்தர் என்ற முறையிலேயோ டாக்டர் கரன் சிங் எந்தவித சலுகையையும் எதிர்பார்க்கவில்லை; பெறவும் இல்லை.

— வெள்ளக்கால் இரா. சுந்தையா

# சிவலிங்க பிரதிஷ்டை, புஷ்ப அர்ச்சனை, பால் அபிஷேகம், பலன்கள்

| செய்த காரியம் | பலன் |
|---|---|
| 1. சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வதால் | அற்புத வருஷங்கள் உருத்திர பதவியில் வாழ்வார்கள். |
| 2. சிவ பூஜைக்கு சந்தனம் தானம் கொடுத்தவர்கள் | வைகாசி, ஐப்பசி, கார்த்திகை, மகா மாதங்களில், கங்கை முதலான மகா நதிகளில் நீராடி அடையும் பயன் |
| 3. சிவாராதனைக்காகப்பூதானம்செய்தவர்கள் | அநேக கோடி காலம் உருத்திர சாரூப்பியத்தை அடைந்து உருத்திர லோகத்தில் வாழ்வார்கள். |
| 4. தைலம் தானம் செய்தவர்கள் | மேலே சொல்வதைப் போல் நான்கு பங்கு சிறப்பான பயனை அடைவார்கள். |
| 5. நெய் தானம் செய்தவர்கள் | அறுபது கோடி வருஷம் உருத்திரப் பதவியில் வாழ்வார்கள். |
| 6. கபிலைப் பசுவின் பாலைக் கொடுத்தவர்கள் | எண்பது கோடி வருஷம் உருத்திரப் பதவியில் வாழ்வார்கள். |
| 7. சிவலிங்கத்துக்கு பால் அபிஷேகம் ஒருமுறை செய்வதினால் அடைபவர்கள் | மூவேளைகளிலும்நீராடிமாசோபவாச ஷோபவாசங்களை ஆயுள் காலம்வரையிலும்செய்தவர்கள் அடையும் பலன். |
| 8. சிவபெருமானுக்குச் சார்த்திய ஒரு மலரால் அடையும் பலன் | நூறு கோதானம் செய்வதால் வரும் பயனைப் போல். |
| 9. சிவபெருமானுக்கு ஆடல், பாடல். இன்னிசைக் கருவிகளால் மகிழ்வித்தவன். | தான் செய்த நூறு குற்றங்கள் மன்னிக்கப்படுவான். |

## எந்த மாதத்தில் என்ன பூ அர்ச்சனை செய்யலாம்?

| | |
|---|---|
| a. தாமரைப்பூ | |
| b. நாயுருவி | சிரவண மாதத்தில். |
| c. தர்ப்பை முதலியவற்றால் | புரட்டாசி மாதத்தில் |
| d. உற்பலம், கரவிரதம், வெள்ளெருக்கு, சம்பகம், வில்லம் அருகு முதலியவற்றால் | ஐப்பசி மாதத்தில் பூஜிக்கலாம். எக்காலமும் பூஜிக்கலாம். |

**சிவபெருமானுக்கு வெண்மையான மலர்களில் விருப்பம் அதிகம்.**

| | |
|---|---|
| கொக்கு மந்தாரை, கரவிரதம், வெள்ளெருக்கு, ஊமத்தையும் | இந்த நான்கு மலர்களின் சுகந்தத்தையும் சிவபெருமான் ஆக்கிராணிப்பார். |

நிர்மாலியமாக மாட்டாத புஷ்பங்கள் எது?

1. கொக்கு மந்தாரையும்,
2. தாமரையும்.

எந்த புஷ்பம் எதற்கு, எவ்வளவு சமம்?

| | |
|---|---|
| 1. ஒருஉற்பலம் | ஆயிரம் கரவீர மலர் |
| 2. ஒரு வெள்ளெருக்கு | ஆயிரம் உற்பலத்திற்குச் சமம். |
| 3. சரபுன்னை ஒன்றும் | ஆயிரம் சிந்து புஷ்பங்கள் |
| 4. கர்ணிகாரம் ஒன்றும் | ஆயிரம் சரபுன்னை |
| 5. கண்டங்கத்திரி ஒன்றும் | ஆயிரம் சிந்து புஷ்பம் |
| 6. சிறந்த மலர்களால் பெரும் போகங்கள்யாவற்றையும்ஒன்று சேர்த்தால் என்ன பலன் கிடைக்குமோ | வில்வபத்திர சூட்டினால் 64 மடங்கு அதிக பலன் கிடைக்கும். |

எல்லா மலர்களையும் விடச் சிறப்பானது எது?

## "வில்வ பத்திரம்"

இதற்கு சிவபெருமான் மகிழ்வது போல எந்த மலருக்கும் மகிழ்வதில்லை.

எந்த திதியில் பூஜை செய்தல்: அஷ்டமி, திரயோதசி, சதுர்த்தசி.

பலன்: துர்க்கதி அடைய மாட்டான்.
எல்லாவற்றையும் விட சுலபமான வழியில் பலன் கிடைக்க கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்து அவர்கள் ஆசி பெறுங்கள்.

(சிவ மஹா புராணம்)

இனிப்பு வகைகள்: அதிரசம், ஸ்வீட் சோமாஸ், பொறி விளங்காய் உருண்டை, குங்குமப்பூ ஹல்வா, குங்குமப்பூ பாதாம்ஹல்வா, குங்குமப்பூ ஜாங்கிரி, குங்குமப்பூ லட்டு, தேங்காய்ப் போளி, மங்களூர் போளி, வெல்லச் சீடை, பாதாம் பதனி, பாம்பே காஜா, தேங்காய் கோவா, வேர்க்கடலை உருண்டை, மா லாடு, ரஸ மலாய், ரவா லட்டு, ரஸகுல்லா, சோன்பப்டி கேக்.

ணிக்கிட்டு நீதான் அவளை மனசு நோகாமல் பார்த்துக்கணும். அவள் இனிமேல் உன்னைச் சார்ந்தவள். நேரம் சரியில்லாம அவளுக்கு இப்படி ஆயிப் போச்சு. மனசைத் தளர விடாதே.

''அப்பா.....!''

''என்ன நரேஷ்?''

''தயவு செய்து வேறே எதைப் பத்தியாவது பேசுங்கப்பா.

''ஏன் அப்படி சொல்றே?''

''எதிர்பார்க்காதது ஏதோ நடந்து போச்சு. இனி அவளை நான் மறந்துடறதுதான் நல்லது.''

''அப்படின்னா......?''

''இவ்வளவு மோசமா முகத்திலேயும், உடம்புலேயும் தீக்காயங்கள் ஏற்பட்டு அவ அசிங்கமா ஆனதுக்கப்புறம் அவளை நான் எப்படியப்பா கல்யாணம் பண்ணிக்க முடியும்?''

''அப்ப நீ அவளது உடம்பைத்தான் காதலிச்சிருக்கே? அவளுடைய கவர்ச்சியான தேகம் உன்னைக் காதல் வயப்படுத்தியிருக்கு. இல்லே?''

''அப்பா, நீங்க என்னை வார்த்தைகளால் புண்படுத்துறீங்க. ப்ளீஸ், என்னை வேறு எதுவும் கேட்காதீங்க. நான் அவளை மறக்கிறதுக்கு முயற்சி பண்ணிக்கிட்டிருக்கேன்.''

அப்பா நிச்சலனமாய் அவனைப் பார்த்தார். பிறகு வருத்தமான சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டு நிதானமாய்ச் சொன்னார்: ''வெல்டன் மைசன். வெல்டன். நான் எதிர்பார்த்தது போல நீ அவளது கவர்ச்சியான உடலைத்தான் காதலிச்சிருக்கே. நானொரு மேக்கப் மேன். கவர்ச்சியைப் பத்தி உன்னை விட எனக்கு அதிகமாகவே தெரியும். அதனால் தான் ராஷ்மிக்குத் தீப்பிடிச்சு முகமெல்லாம் வெந்து போயிட்டா மாதிரி அவளுக்கு மேக்அப் பண்ணி ஒரு நாடகத்தை ஏற்படுத்தினேன். இதுக்கு எல்லோரும் ஒத்துக்கிட்டாங்க! இப்ப உண்மை வெளியாயிடுச்சு.''

''அப்பா!''

''பதற்றப்படாதே நரேஷ். இது உனக்கும் ஒரு வகையில் நல்லதுதான். நாளைக்கு இப்படியொரு சம்பவம் உண்மையிலேயே நடந்துதுன்னா அவளுடைய வாழ்க்கை நிர்மூலமா ஆயிடும். உனக்கும் மன நிம்மதி இருக்காது. நீ இன்னொரு தடவை ராஷ்மியைச் சந்திச்சு நீ நடந்துக்கிட்ட முறையை வேறுவிதமா மாத்திச் சொல்லி அவளுடைய இரக்கத்தைச் சம்பாதிச்சுக்க வாய்ப்பில்லே. இனிமேல் அவ மனசும் மாறாது. ஏன்னா இதுவரைக்கும் நீ பேசின அத்தனையும் என் பாக்கெட்லே இருக்கிற டெமான்ஸ்ட்ரேஷன் டேப் ரிகார்டர்லே பதிவாயிடுச்சு. என் வருகைக்காக ஆவலா எதிர்பார்த்துக்கிட்டிருக்கிற ராஷ்மிக்கும் அவளோட பெற்றோருக்கும் இது போதும்னு நினைக்கறேன். உன்னுடைய துரதிருஷ்டத்துக்காக ரொம்ப வருத்தப்படறேன். மனசைப் போட்டு வீணா குழப்பிக்காதே. நான் வரட்டுமா?''

''அப்பா தயவு செய்து ஒரு நிமிஷம் நில்லுங்க ப்ளீஸ்...''

# மிட்டாய் தரும் மயக்கம்!

வாசகர் குமுறல்

## திருத்தவே முடியாத நிலை!

சேலத்திலிருந்து கடலூர் செல்லும் வழியில் கூட்டு ரோடில் இரவு சுமார் 12.00 மணிக்கு காப்பிக்காக, அரசின் 'கழக'பஸ் நிறுத்தப்பட்டது. ''பஸ் பத்து நிமிடம் நிற்கும். காப்பி, டீ சாப்பிடலாம்'' என்று கத்திய சிறுவன் ஒருவன், பயணிகள் இறங்கத் தொடங்கியதும் படியில் நின்று முகம் பார்த்து, ''பட்டைகூட கிடைக்கும்'' என்று சொன்னதையும், ஒரிருவர் குடித்ததையும் கண்டு திடுக்கிட்டேன். அதன் பிறகு, அவர்களின் பேச்சும், சாராய நாற்றமும் தாங்க முடியாது போயிற்று. விசாரித்தபோது, இரவு நேரப் பேருந்துகளில் அது வழக்கம் என்றும் தெரிந்தது. பஸ்ஸில் பெண்கள் இருந்தால் அவர்கள் நிலை? குடிப் பழக்கம் உள்ள ஓட்டுனர் இருந்தால் பஸ்ஸின் நிலை...?

திருத்தவே முடியாத ஒரு நிலைக்கு, இந்த சாராய சாம்ராஜ்யம் தமிழ்நாட்டை இழுத்துச் சென்று கொண்டிருக்கிறது.

— வி. ரமேஷ், பெங்களூர்.

## வீண் பிடிவாதம்!

பத்திரிகைகளுக்கு எனது ஆக்கங்களை நான் அனுப்பும்போது சுய விலாசமிட்ட உறையினை ஆக்கத்துடன் இணைத்து அஞ்சலகத்தில் அதனை எடை பார்த்து, அதற்குண்டான ஸ்டாம்பினை சுய விலாசமிட்ட உறையிலும், ஒட்டி பின்பு போஸ்ட் செய்வது வழக்கம். ஆனால் சென்ற முறை அஞ்சலகத்தில் எடை பார்க்கச் சென்றபோது 'உறையை ஒட்டினால்தான் எடை போடப்படும்' என்றனர். நான், 'சுய விலாசமிட்ட உறை உள்ளே இருக்கிறது. எடை பார்த்த பின்பு அதற்குண்டான ஸ்டாம்பினை அவ்வுறையில் ஒட்ட வேண்டும்' என்று விளக்கினேன். ஆனால் அங்கு அமர்ந்திருந்தவர் செவிசாய்க்கவில்லை. பின்னர் நான் சுய விலாசமிட்ட உறையில் தோராயமாக ஸ்டாம்ப் ஒட்டி அனுப்பினேன். அரசு ஊழியரின் இம்மாதிரி அர்த்தமற்ற வீண்பிடிவாதங்கள் வேதனை தருகின்றன.

— கோக. சுரேஷ், கோவை—9.

## முதல்வரின் பேச்சு!

முதலமைச்சர், சமீபத்தில் ஓரிடத்தில் பேசும் பொழுது, 'லஞ்சம் கொடுக்காதீர்கள். வாங்குபவர்கள் பற்றி என்னிடம் நேரில் தகவல் கொடுத்தால் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்' என்று சொன்னார்.

ராஜாஜி அவர்கள் நம் மாநிலத்தில் இரண்டாம் முறை முதல்வராக இருந்தபொழுது, என் நண்பர் ஒருவர், அவர் தெருவிலுள்ள சில குறைபாடுகளை நீக்க வேண்டி நேரில் சந்திக்க விரும்பினார். ராஜாஜி பதிலெழுதினார்:''ஒரு காலணா (அப்பொழுது) கார்டில் எழுதினால் குறைகள் கவனிக்கப்படும். அப்பொழுதும் நிவர்த்திக்கப்படாவிட்டால் நேரில் வரலாம்''. அதை நம்பி, ஒரு கார்டில் நண்பர் தங்கள் தெருவில் நிவர்த்திக்கப்படாத குறைகளை எழுதினார். என்ன ஆச்சரியம்! பத்து நாட்களுக்குள் அதிகாரிகள் வந்து குறைகளை நீக்கிச் சென்றுவிட்டார்கள். இதை விடுத்து நேரில் சொல்லுங்களென்றால் எல்லோருக்கும் இயலுமா? அல்லது எம்.ஜி. ஆரைப் பார்ப்பதுதான் அத்தனை சுலபமா?

முதல்வருக்கும் அமைச்சர்களுக்கும் எழுதிய கடிதங்களுக்குக் கண்டிப்பாகப் பதில் தர வேண்டும். அவர்கள் எடுத்த நடவடிக்கை பற்றி மக்கள் அறிந்து கொள்ள உரிமை உண்டு. அதுதான் ஜனநாயகம்.

— கே. அம்புஜம், சென்னை—78.

## மிட்டாய் தரும் மயக்கம்!

"சமீபத்தில் நான்கு வயதுப் பையன் ஒருவன் அவனது பெற்றோர்களால் எனது மருத்துவமனைக்கு அழைத்து வரப்பட்டான். தொடர்ந்து ஒரு வாரமாக ஒரு மாதிரியான தூக்க நிலையில் பையன் இருப்பதாகப் பெற்றோர் கூறினர். மிகக் கவனமாகப் பரிசோதிக்கப்பட்டபோது அச்சிறுவன் 'மின்ட்டி' மிட்டாய்களைத் தொடர்ந்து மூன்று மாதமாகச் சாப்பிட்டு வந்திருப்பது தெரிய வந்தது. டி.வி. யில் வந்த விளம்பரத்தைக் கண்ட பெற்றோர், மின்ட்டி சாதாரண மிட்டாய் என்ற எண்ணத்தில் வாங்கித் தந்துள்ளனர். ஆனால், இப்போது சிறுவன் அந்த மிட்டாய்க்குப் பழக்கமாகிவிட்டான். 'மெந்தால்' கலந்துள்ள இந்த மிட்டாய் ஒரு மயக்க நிலையைக் கொடுப்பதுடன் தொடர்ந்து உபயோகித்தால் ஒருவகைக் காளான் வியாதியைத் தோற்றுவிக்கும்தன்மை உடையது. இப்போது இந்த 'மெந்தலேட்' மிட்டாய்கள் எல்லாக் கடைகளிலும் சாதாரண மிட்டாயைப் போல விற்கப்படுகிறது. ஆகவே பொது மக்கள் இது விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்."

ஹிந்து பத்திரிகையில் ஒரு மருத்துவர் எழுதிய இந்தக் கடிதத்தைப் படிக்காத பலரும் இதை அறிய வேண்டும் என்பதால் தமிழாக்கம் செய்து அனுப்புகிறேன்.

— லட்சுமி நடராஜன், திருப்பூர்.

# மாதம் ஒரு மாவட்டம்

## கல்கி ஏற்கும் சமுதாயப் பணி



# இந்த மாதம் தர்மபுரி

மாதம்ஒருமாவட்டம்' என்றதலைப்பில் கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், முதல் மாவட்டமாக மதுரை மாவட்டம் பற்றிய செய்திகள் வெளியானதும், வெளியானவுடனேயே அவற்றின் மீது உடனடியாக மதுரை'கலெக்டர் நடவடிக்கைகள் எடுத்ததும் பற்றி நீங்கள் ஒவ்வொருவரும் அறிவீர்கள்.

அது போலவே அடுத்ததாக வெளி வந்த பெரியார் மாவட்டப் பிரச்னைகளின் மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் பற்றிய முழு விவரங்களைப் பெரியார் மாவட்டக் கலெக்டரிடமிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

கல்கியின் இந்தத் திட்டத்தில் ஐந்தாவதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் மாவட்டம்தான் தர்மபுரி மாவட்டம்!

கர்நாடகத்திலிருந்து வரும் காவிரி தமிழகத்தில் நுழையும் நுழை வாயிலாக இருக்கும் தர்மபுரி மாவட்டம் எத்தனையோ சிறப்புக்களைப் பெற்றிருந்தாலும், அது சேலம் மாவட்டத்திலிருந்து பிரிந்த பிறகு எந்த அளவுக்கு ஒரு தனி மாவட்ட அந்தஸ்தில் வளர்ச்சி பெற்றிருக்கிறது என்பது இன்னமும் ஒரு கேள்விக்குறிதான்!

எனவே, உங்கள் மாவட்டத்தில் — உங்கள் ஊரில் இன்னமும் எத்தனையோ பிரச்னைகள் தீர்க்கப்படாமல் இருக்கலாம். தனிப்பட்ட முறையில் கிடைக்க வேண்டிய நீதி கிடைக்கப் பெறுததாலும் பலருடைய வாழ்க்கை ஓர் அவலத்திற்கு ஆளாகி இருக்கலாம். இவற்றையெல்லாம் அரசியல்வாதிகளும், அதிகாரிகளும் கண்டு கொள்ளாமல் காலம் கடத்திக் கொண்டும் இருக்கலாம்.

ஆகவே, உங்கள் மாவட்டப் பிரச்னைகள் அல்லது உங்கள் ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளையும் அரசியல்வாதிகளுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சுருக்கமாக எழுதி உங்கள் முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும்,உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் எங்களுக்கு எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவரது கடிதத்தையும் பரிசீலனை செய்து, முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, ஜூன் மாதம் இரண்டாவது வாரத்தில் கல்கி பிரதிநிதிகள் தர்மபுரி மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய விவரங்கள் தனித் தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும்.

பிறகு, கல்கி பிரதிநிதிகள் தர்மபுரி மாவட்ட கலெக்டரைச் சந்தித்து, தாங்கள் சேகரித்து வந்த பிரச்னைகளுக்குரிய செய்திகளைப் பற்றி விவாதிப்பார்கள். பதில்களைப் பெறுவார்கள். பின்னர் அவை எல்லாம் ஜூலை மாதக் கல்கி இதழ்களில் செய்திகளாகவும், பேட்டிக் கட்டுரைகளாகவும், பிரசுரமாகும். எல்லாப் பிரச்னைகளும் பிரசுரமாகாவிட்டாலும்கூட, அரசாங்கத்தின் கவனத்திற்காவது கொண்டு வர முடியுமல்லவா!

**தர்மபுரி மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும் தவிர சாதனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.5.86 உறையின்மேல் 'மாதம் ஒரு மாவட்டம்—தர்மபுரி' என்று குறிப்பிடுவது மிகவும் நல்லது.**

— ஆசிரியர்.

ஆநிரை மேய்க்க போதி
அருமருந்து ஆவதறியாய்
கானிடம் முழுதும் திரிந்து
நின் கரிய திருமேனி வாட

பாசுரத்தைச் சாரதா சன்னமான குரலில் பாடிக் கொண்டிருப்பது கேட்டது. பூவை தொடுத்துக் கொண்டே பாடுவாள். அது அவள் வழக்கம். இவ்வளவு பாடுபட்டு, எல்லாவேலைகளையும்ஒதுக்கிவைத்துவிட்டுப் பூக்கட்டுவதும் அதை அப்படியே மகள் நவநீக்குச் சூட்டி அழகு பார்ப்பதும் எத்தனை காலமாய் இந்த வீட்டில் நடந்து வருகிறது! நவநீ இன்னமும் சின்னப் பெண்ணா என்ன? அவளே பூவைக் கட்டிக் கொள்ள மாட்டாளா? அவளொத்த பெண்கள் இப்போது தன் பிள்ளைகளுக்குப் பூச்சூடுகிறார்கள்.... ஆனால் நவநீ..... தன் மகளைப் பற்றிச் சிவ ராமன் நினைக்கும்போது வருத்தம் மேலிட்டது. மனசில் பாரம் தோன்றியது. சாரதா 'தேனினும் இனிய பிரானே செண்பக பூச் சூட்ட வாராய்' என்று நவநீயை இன்னமும் குழந்தையாய் ஏற்றுக் கொள்வதைப் போல் சிவராமனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

சிவராமன் யோசிக்காத விஷயங்கள் இல்லை. பணம் சேர்ப்பதைக் குறித்துப் பல முறை சிந்தித்திருக்கிறார். தன் மகளுக்கு எப்படிப் பணமில்லாமல் கல்யாணம் நடக்கும்? யார் வந்து பொறுப்பேற்றுக்கொள்வார்கள்? இல்லை. சாய்வான சூரிய வெளிச்சம். மேசையின் விளிம்பை தொடுகிறது. ஜன்னல் கம்பியின் நிழல் ஆஷ் டிரேயின் மீது விழுந்து மிகத் துல்லியமான இரண்டு அரை வட்டங்களாகப் பிரித்தது. அதைப் பார்த்தபோது தான் ஏன் இத்தனை நேரமாகச் சாம்பலைத் தரையில் தட்டினோம் என்று வருத்தப்பட்டார். சாரதா பெருக்கும்போது திட்டுவாள். அவரது வருத்தம் அவள் திட்டுவாளே என்பது குறித்து அல்ல; அவளுக்குச் சிரமம் கொடுப்பதிலேயே நம் வாழ்க்கையின் பெரும் பகுதி கழிந்துவிட்டதே என்பதுதான்.

சாரதா திட்டிக் கொண்டே பெருக்கினாள். தான் எங்கோ கிடந்த ஆஷ்ட்ரேயைத் தேடி கொண்டு வைத்தும் கீழே சாம்பல் பூத்துக் கிடக்கிறது என்றால் என்ன அர்த்தம் என்று கேட்டாள். சிவராமன் வாயைத் திறக்கவில்லை.

இது பைத்தியக்காரத்தனம்தான். கம்பெனியை விட்டு வெளியில் வந்த கையோடு நவநீயின் கல்யாணத்தை முடித்திருந்தால் இத்தனை மனக் குலைவு இருந்திருக்காது. குறைச்சலான விலையில் வீடு ஒன்று கிடைக்கிறதே என்று வாங்கிக் கொண்டார். அதன் பிறகு அதனைச் சரி செய்ய ஏகப்பட்ட செலவுகள். இப்போதும் விற்றுவிடத் தயார். ஆனால் யார் வாங்குவது? நாளுக்கு நாள் விலை கூடி வர சிவராமன் ஒன்றும் பட்டணத்தில் வீடு

# வாழ்கில்லேன் கண்டாய்.

## இரா. சோமசுந்தரம்

கைத்தலம் கொடுக்க எந்த சகோதரன் முன் வருவான். யாருமில்லையே. சண்முகநாதன் அண்ணனுக்குச் சமமானவனாய் இருந்தாலும் வருவானா? இதனால் தனக்கு நஷ்டம் ஏற்படும் என்றல்லவா ஒதுங்கிவிடுவான். ஏன், நாம் பார்க்கவில்லையா என்ன? தன் சொந்த தங்கைக்கே உதவி செய்ய மறுத்திருக்கிறான். அது என்னமோ நவநீயிடம் ஒரு பிரியம் வாஞ்சை கல்மிஷமில்லாத திறமற்ற அன்பு, சிநேகிதம். அதைத் தவிர வேறென்ன. அதனால், அவனைக் கொண்டு நமக்குப் பலன் ஒன்றுமில்லை.

சரி, வேறு யார் இருக்கிறார்கள்?

கூம்பி நிற்கும் சாம்பல் நெருப்பை நீர்த்து விடும்படி செய்கிறது. சிவராமன் மீண்டும் அணைந்து போன சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். மீண்டும் சிந்தனை — மீண்டும் சாம்பல். ஆள்காட்டி விரலால், பறவை தன் அலகு கொண்டு தானியம் பொறுக்குவது போல, சாம்பலின் மேல் தட்டினார்.

ஜன்னலின் வழியாகத் திடீரென்று வந்தது போல வெளிச்சம். அது ஏற்கெனவே அங்கே இருக்கிறது. அவர்தான் கவனிக்க



வாங்கவில்லை. வாங்கும்போது வனப்புடன் இருந்த சுவர்கள் இவர் வந்ததும் தடதடத்து உதிர்ந்து போனது. சிதிலமான இதைப் போய் யார் சொன்ன விலைக்கு வாங்குவார்கள்?

சாரதா எதையோ சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் எதைச் சொல்கிறாள் என்கிற உணர்வு இல்லாமல் ''ஏண்டி நான் செத்துப் போயிட்டா என்ன பண்ணுவே?'' என்றார்.

''செய்ய என்ன இருக்கு. நவநீயைக் கூட்டிக்கிட்டு ஆரணிக்குப் போய் உன் தங்கை திரும்பி வந்துட்டேன்டான்னு ராமுவோட கால்லே விழணும். வேண்டாம் போன்னு சொல்லமாட்டான். அப்படியே அவன் சொன்னாலும் உலகத்துல எதையாவது செய்து பிழைக்க முடியாதா என்ன?

அவர் எதிர்பார்த்ததெல்லாம் துடைப்பத்தை அப்படியே போட்டுவிட்டு ஓடி வந்து, ''அப்படி சொல்லாதீங்கோ'' என்று அவர் வாயைப் பொத்தி அவள் அழுவாள் என்பதைத்தான். ஆனால் அவள் சொன்னது ஆச்சரியமாக இருந்தது. இவள் இந்த அளவுக்குப் பக்குவமடைந்துவிட்டாளா என்று ஆச்சரியமாகவும் இருந்தது.

''அப்பா யாரோ வந்திருக்காங்க'' என்றாள் நவநீ.

''யாரு'' என்றபடி ஊஞ்சலில் இருந்து எழ எத்தனித்து, சோம்பல் பட்டு உள்ள



வரச் சொல்லேன்'' என்றார்.

''வாங்க.''

நவநீ சொல்லிவிட்டு அறைக்குள் போனாள். யாரோ மெல்ல நின்று ஷூவைக் கழற்றும் சத்தமும் நவநீ உள்ளே போனதாலும் அது யாரோ இளைஞன் என்று நினைத்தபடி தாமே எழுந்து போனார்.

''நான் கந்தசாமியோட பையன். உங்களை பாங்க்ல ரெண்டு முறை சந்திச்சிருக்கேன்!''

''நெனவிருக்கு'' என்று புன்னகையாய்ப் பொய் சொன்னார். அவன் சொன்ன பிறகு தான் அவருக்கு நினைவு வந்தது. ''சாரதா இங்கே வா. நீ வாப்பா''என்று கூட்டிக் கொண்டுபோய் ஊஞ்சலில் உட்கார்த்தினார்.

''என்னவெல்லாமோ நடந்து போச்சி.''

அவன் மௌனமானான்.

''கவலைப்படாதே. கந்தசாமி சாகறச்சே அவருக்கு மனக்குறை எதுவுமே இல்லே. அந்த மாதிரி பிள்ளையா நீ இருந்துட்டே. எத்தனை தடவை உன்னைப் பத்திச் சொல்லியிருப்பான்....''

''அவரோட நண்பர்கள் நீங்களெல்லாம் சொல்லும்போது அவரோட இருந்து வாழாமல் எங்கேயோ ஹாஸ்டல்ல வாழ்க்கையை வீணாக்கிட்டோமேன்னு தோணுது.''

''நாங்க அவனோட நாள் முழுக்கப் பழகினோமா என்ன? கொஞ்ச நேரம். அவ்வளவு தான். அது போதும். இவன்தாண்டி கந்தசாமியோட பிள்ளை'' என்று அப்போதுதான் ஈரக் கையை முந்தானையில் துடைத்துக் கொண்டு வந்து நின்ற மனைவியிடம் சொன்னார்.

''உங்க பிள்ளையைக் கூட்டிக்கிட்டு வாங்களேன்னு சொன்னபோதெல்லாம் படிக்கிறான் படிக்கிறான்னு சொல்லி ஏமாத்துவார்!''

அவன் சிவராமனைப் பார்த்தான். லேசாக ஊஞ்சலை நெம்பினான். ஊஞ்சல் கிறீச்சிட்டது. சிவராமன் கண் ஜாடையில் காப்பி கொண்டு வரும்படி சொல்லச் சாரதா நகர்ந்தாள்.

''நான் பியூன் செல்வமணியைப் பார்க்கணும்.''

''ஆமா ஆமா. அவன் கந்தசாமிக்கு ரொம்ப நெருக்கம். பால்ய சிநேகிதன். ஏன் என்ன விஷயம்?'' என்றார். அவன் சொந்த விஷயத்தை ஏன் ஆராய்கிறோம் என்று தம்மையே கேட்டுக் கொண்டார்.

''அவருக்கு அப்பா ஐயாயிரம் ரூபாய் கொடுக்கச் சொன்னார். அவர் கடைசியா சொன்ன வார்த்தை அதுதான்'' என்றான். பிறகு, ''அவர் வீடு தெரியாது. நீங்க கொண்டு போய்க் காட்டினால் நல்லாயிருக்கும்.''

''வரேன். அது எனது கடமை. நவநீ....''

நவநீ படித்துக் கொண்டிருந்த புத்தகத்துடன் வந்து நின்றாள். ''அம்மா வரச் சொன்னா பாரு'' என்றார். இது, 'நீ போய்க் காப்பி கொண்டு வா' என்பதின் சங்கேத வார்த்தை. விருந்தினரை வைத்துக்கொண்டு, சாதாரணமாகப் பேசுவது போல் பல விஷயங்களை உணர்த்திவிடுவார். அதை நவநீ எளிதாகப் புரிந்து கொள்ளவும் செய்தாள்.

ஆனால் இத்தனை அறிவுள்ள பெண்ணை மிக அழகு என்றில்லையானாலும் மனசுக்கு நிறைவு தரும் அழகை யாரும் மணக்க வராதது கவலையை தோற்றுவித்தது. பியூன் செல்வமணி கூட தன் மகள் கல்யாணத்துக்கு பணம் ஏற்பாடு செய்கிறான் என்றால் தான் மட்டும் வெறுமே மனம் குமைந்து அழிகிறோமே என்று நினைத்தார்.

''டாய்லெட் எங்கே இருக்கு?'' என்று கூச்சத்துடன் கேட்டான்.

''வா'' என்று சமையலறையைக் கடந்து தோட்டத்துக்கு அழைத்துப் போனார். நவநீ கப் செட்டைக் கழுவிக் கொண்டிருந்தாள். அவர்கள் வருவதைப் பார்த்ததும் எழுந்து நின்று இடுப்பில் சொருகிய புடைவையை இறக்கிவிட்டாள்.

அவன் வரும்வரையில் காத்திருந்தவர் தன் மகளைப் பார்த்தார். அவள் அன்பாக வளர்க்கும் மலர்ச் செடியைப் பார்த்தார். மிகச் சாதாரண உடையுடன் எளிமையான அழகுடன் இருக்கும் இவள் காதல் வயப்பட்டதில்லையா? இவளைவிட, மோசமான முகவெட்டு உடைய பெண்கள் காதலித்துத் தனக்கென ஒரு துணையைத் தேடிக் கொண்டு வாழ்கிறார்களே! இவள் மனத்தில் காதல் இல்லாமலா இருந்திருக்கும்?

தகரக்கதவை ஓசையுடன் திறந்துகொண்டு அவன் வெளியில் வந்தான். நின்று கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு பூக்களைப் பார்த்தான்.

''பராமரிப்பு நீங்கதானா?''

''இல்லே! நவநீதான் எல்லாம்.''

தன்னிடம் உங்க பெண் வளர்க்கிறாளா என்று கேட்க, கூச்சப்பட்டு இப்படி மாற்றிக் கேட்கிறான் என்று உணர்ந்தார்.

அவனுக்கு நவநீ காப்பி கொண்டு வந்து தரும்போது அவன், ''தோட்டம் ரொம்ப நல்லாயிருக்கு! ரோஜாவெல்லாம் தனியாக, மல்லியெல்லாம் தனியாக இருந்தால் இன்னும் அழகாக இருக்கும்'' என்றான்.

நவநீ, ''அது எனக்குச் செயற்கையாத் தெரியுது'' என்றாள்.

''அது சரி! ருசிகள் மாறுபடும்!'' என்று சொல்லிக் காப்பியைப் பருகினான். கப் செட்டை வைப்பதற்கு இடம் தேடியபோது நவநீ கைநீட்டி வாங்கிக் கொண்டாள்.

''போவோமா?''

சிவராமன் தயக்கத்துடன் சொன்னார்: ''உனக்கு ஆட்சேபமில்லேன்னா நவநீ வந்து வீட்டைக் காட்டுவாள். எனக்கு முதுகு வலி. அதுதான் இத்தனை நேரமா....''

''பரவாயில்லே.''

நவநீ அப்பாவை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

அவர்கள் வீட்டு வாசலைக் கடக்கும் முன்பாக ஓடிப் போய், 'இல்லே, நானே



## இப்படியும் ஒரு சங்கம்!

'பரோடா' நகரில் ஒரு விநோதமான சங்கம் நடக்கிறது. "காதல் திருமண சங்கம்"! இந்தச் சங்கம் காதல் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறவர்களுக்கு உதவுகிறது! தவிர, காதல் மணம் புரிந்த ஜோடிகளுக்கிடையில் ஏதேனும் தகராறு ஏற்பட்டால், ஆலோசனைகளைத் தருகிறது! தேவைப்பட்டால் காதல் ஜோடிகள் திருமணம் செய்து கொள்ளப் பண உதவியும் செய்கிறது.

— சம்பத்குமாரி.

ஆதாரம்: சண்டே.

வருகிறேன் என்று சொல்லிவிடலாமா என்று தோன்றியது. இருந்தும் அவரால் ஊஞ்சலிலிருந்து எழக்கூட முடியவில்லை. உடம்பு உண்மையிலேயே எழ மறுத்தது. இதற்காக அவர் சற்றுப் பீதியடையவும் செய்தார். தம் மனைவி சமையலறையிலிருந்து தம்மை வித்தியாசமாகப் பார்ப்பதையும் உணர்ந்தார். அவளுக்கும் தனது எண்ணம் புரிந்திருக்கலாம்.....

ஏன் தன் மனம் இத்தனை மோசமானதாக மாறியதோ என்று ஊஞ்சலில் ஓங்கிக் குத்து குத்தினார். ஊஞ்சல் பலகை அதிர்ந்தது. சங்கிலிப் பிணைப்புகள் நெளிந்து சத்தமிட்டன. அவர் மனசில் சின்ன நப்பாசை. இந்தக் கொஞ்ச நேரத்தில் அவர்கள் பேசிய வார்த்தைகள் வளர்ந்து காதலாக மாறி விடாதா!

ஆனாலும் தன் இயல்புக்கு மாறானதாகச் செய்தது குறித்து வருந்தினார். சாரதா உள்ளே பாத்திரத்தைப் போட்டு உடைப்பது கேட்டது. ஓடிப் போய்த் தப்பு தாண்டி மன்னிச்சுடு என்று சொல்ல நினைத்தார். ஆனால் அவளைப் பார்க்கவும் கூசியது. படுக்கைக்குப் போய்ப் படுத்துக்கொண்டார்.

தன் மகளுக்கு நல்ல கணவன் கிடைக்க மாட்டானா என்கிற கருத்து இருக்கிறது. அதற்காக, தெருவில் போகிறவனுக்கெல்லாம் அலங்கரித்துக் காட்டாமல் நல்ல குடும்பம் என்று கேள்விப்பட்டு அவர்களைச் சுற்றத்துடன் அழைத்துத் தம்முள் ஒருவராய் விருந்து படைத்து, கலந்து பேசித் தம் எண்ணத்தை முன் வைப்பதுதான் பிரதானமாக இருக்கிறது. ஆனால் இது அப்படி இல்லையே! தன் நண்பனின் பிள்ளை வருகிறான். அவனோடு தன் மகளை அனுப்பிக் காதல் கொள்ள மாட்டானா. இவளேனும் துணிந்து துணையைத் தேடிக் கொள்ள மாட்டாளா என்கிற கீழான சிந்தனைதான் இது. தன் எண்ணத்தை வெளிப்படையாகச் சொல்ல முடியாமல், அவலை நிலைக்குத் தள்ளும் செய்கை பொய்தான், கேவலம்தான் என்று நினைத்தார்.

அவர்கள் திரும்பி வந்ததும் அவன் படுக்கையருகில் நின்று அவரைத் துக்கம் விசாரித்தான். நன்றி சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

அவனைப் போகச் சொல்லிவிட்டுத் தெரு வரையிலும் கொண்டு போய்விடாமல் அறைக்குள்ளாகவே இருந்தார். போனால் போகிறான் என்பதுபோல் மௌனம் சாதித்தார். மனசு அவரைத் தொல்லைப்படுத்தி அவரை லேசாகச் சுரம் கண்டு படுக்கையில் விழும்படி செய்தது. படுக்கையில் படுத்தபடி யோசித்தார். இதைவிட ஒரு கொடிய துரோகம் என்னவாக இருக்க முடியும்?

பொழுது சாயும் வரையில் நவநீ அப்பாவை வந்து பார்க்கவில்லை. அம்மா மட்டும் அவளிடம் அவர் உடல் நலக் குறைவைச் சொன்னது கேட்டது. ஆனாலும் அவள் வரவில்லை. ஏதனாலோ மனக்கசப்பு அடைந்திருந்தாள். அவள் வராததும் ஒருவிதத்தில் நல்லதுதான். அவளைக் கண்டதும் அவர் குழந்தையைப்போல் தேம்பியழ ஆரம்பித்துவிடுவார். அவளிடம் எதை மறைக்க வேண்டும் என்று நினைக்கிறாரோ அதை மறைக்க முடியாமல் சொல்லி மன்னிப்பு கேட்டுவிடுவார். அவள் வராததே நல்லது!

இரவு சாப்பாடு வேண்டாம் என்று சொல்லிவிட்டு சிகரெட்டை ஊதித் தள்ளிவிட்டு அப்படியே உறங்கிப் போனார். இரண்டாவது ஆட்டம் விட்டு ஜனங்கள் போவதும் நாய்கள் குரைப்பதும் கேட்டு விழித்துக் கொண்டு ஜன்னலைத் திறந்தார். குளிர்ச்சியான காற்று அறைக்குள் வந்தது.

ஜனச் சந்தடி கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிவிட்டது. ஜன்னலை மூடியபோது எங்கிருந்தோ ஒரு பாட்டு கேட்பது போல தோன்றியது. தெளிவான குரலில் அது சாவேரி ராகம் என்பதும் கொஞ்சம் கொஞ்சமாக நவநீயின் குரல்தான் என்பதையும் உணர்ந்தார். எழுந்து அங்கே போய் என்ன பாட்டு பாடுகிறாள் என்றறிய ஆவல் தோன்றியது. நடையில் வந்து பார்த்து அவள் படுக்கை காலியாய் இருப்பதைக் கண்டார். தோட்டத்தில் பூச்செடியின் அருகே அவள் உட்கார்ந்தபடி பாடுவது தெரிந்தது.

வானிடை வாழும் அவ் வானவர்க்கு
மறையோர் வேள்வியில் வைத்த அவி
கானிடைத் திரிவதோர் நரி புகுந்து
கடப்பதும்மோப்பதும்செய்வதொப்ப
ஊனிடை, ஆழி சங்கு உத்தமர்க்கென்றே
உன்னித் தெழுந்த என் தடமுலைகள்
மானிடவர்க்கென்று பேச்சு படில்
வாழ்கில்லேன் கண்டாய்மன்மதனே...

அந்தக் குரலின் சோகமும் நாச்சியார் பாடலின் பொருளும் அவள் தமது எண்ணங்களை உணர்ந்து கொண்டிருக்கிறாள் என்பதை மட்டுமே சொல்லியது. அவர், தன்னைப் பார்த்துவிடுவாளோ என அச்சமுற்றுத் தம் வீட்டிலேயே ஒரு திருடனைப் போல் பயந்து, தம் அறைக்குள் நுழைந்து கொண்டார்!

கோடையின் கொடுமையைக் குளுமையாக மாற்றும்
குளிர்ச்சிமிக்க ஒரே மூலிகை ஷாம்ப்பு

# கிரௌன் ஹெர்பல் ஹேர் கேர்

முற்றிலும் மூலிகைச் சாறுகளால் உருவாகி,
குற்றால அருவியின் குளுமையும்,
வற்றாத நுரைவளமும் கொண்டது!
கண்களுக்குக் குளிர்ச்சியை அளிக்கிறது!
முடி உதிர்தலைத் தடுத்து நிறுத்துகிறது!
இளநரை வராமல் பாதுகாக்கிறது!
பொடுகுகளைப் போக்குகிறது!
அரிப்புத்தினவுகளை அகற்றுகிறது!
முடிகள் அடர்த்துவளர உதவுகிறது!
முடிக்கற்றைகளை வழுவழுப்பாக்குகிறது!




தீங்குகள் மலிந்த செயற்கை ஷாம்ப்புகளின் மத்தியில் முற்றிலும் மாறுபட்ட, மகத்தான, ஒரே மூலிகை ஷாம்ப்பு!



குளிப்பதற்கு 15 நிமிடங்களுக்கு முன்
தலையில் தேய்த்துக்கொண்டு,
அதன் பிறகு குளிக்கும்போது
பெறுகின்ற குளுமையும் சுகமுமே
அலாதிதான்!



தயாரிப்பாளர்கள்
கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்
55, ஹாரிங் ரோடு, புதுப்பேட்டை, சென்னை-600 002.

CHP/S/1/86

• நாடகக் குழுவினர்



# நிமிஷத்துக்கு ஒரு சிரிப்பு!

**நகைச்சுவை இழைய ஒரு நடன நாடகம்**

ஆரம்பம் முதல் முடிவுவரை சுமார் இரண்டரை மணி நேரத்தில் நிமிடத்திற்கு ஒரு முறையாவது மனம் விட்டு ரசித்துச் சிரிக்க வைத்தது ஒரு நாடகம். ஒரு கணம் கவனம் சிதறினால் சபையோரின் சிரிப்பொலி கேட்கீ, 'ஐயோ ஒரு ஜோக்கை இழந்து விட்டோமே' என்று ஆதங்கப்பட வைத்தது இந்த இசை நாடகம்.

ஒரு சின்னக் கதைதான். அதுவும் ராஜா ராணி கதை. ஹான்ஸ் கிறிஸ்டியன் ஆண்டர்ஸன் என்ற புகழ் மிக்க டச்சுக்காரர் குழந்தைகளுக்குக் கூறிய கதை. 'அரசி பொல்லாதவர். அரசனால் பேச முடியாது. இளவரசன் அசடு. இளவரசனுக்குக் கலியாணம் ஆகும் வரை அந்த நாட்டில் யாருமே கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று ஒரு சட்டம்! அரசியோ அத்தனை இளவரசிகளையும் தகுதியில்லாதவர்கள் என்று தள்ளி விடுகிறாள். அப்பாவி இளவரசனுக்கு ஏற்ற அரசிளங்குமரியை அழைத்து வருகிறான் ஒரு வீரன். அரசியின் சோதனையில் வெற்றி பெற்று இளவரசனைக் கைப்பிடிக்கிறாள் இளவரசி. எல்லாருமே மகிழ்கிறார்கள்.

இந்த சின்னக் கதையை, பல பாத்திரங்களை இணைத்து இசையும் அமைத்து நாடகமாக்கித் தருவதில் டைரக்டர் மெரிமஸ்டெயின் அபார வெற்றியடைந்திருக்கிறார்.

மேற்கத்திய இசையானாலும் எளிய இனிய இசை அமைப்புடன் திறமையான ஆர்கெஸ்ட்ரா. பியானோ வாசித்த பெண்மணி எவ்வளவு எச்சரிக்கையோடு செயல்பட்டார்! பாடுகிறவர்களுக்கு சரியான சமயத்தில் எடுத்துக் கொடுத்து சிரமமே இல்லாமல் நடத்திக் கொண்டு போனதைப் பார்க்க அதிசயமாக இருந்தது.

இசை, நடனம், நாடகம் மூன்றும் கலந்த இந்த நிகழ்ச்சியை என்ன அழகாகக் கோர்வையாக நடித்துக் காட்டினார்கள்! ஒருகணம் கூட வீணானதாக எண்ண முடியவில்லையே! பழைய கதையானாலும் எல்லாக் காலத்துக்கும் பொருத்தமான செய்தியை உள்ளடக்கியிருக்கிற அழகை நினைத்து நினைத்து மகிழலாம்!

அமெரிக்காவிலிருந்து வந்த மின்னிஸோட்டா ஆபரா கம்பெனி சென்னையில் நிகழ்த்திய இந்த இசை நாடகத்துக்கு ஏகப்பட்ட டிக்கெட்டுகளை (எங்கே வரப் போகிறார்கள் என்றெண்ணியோ என்னவோ) அமெரிக்கத் தகவல் நிலையம் வழங்கிவிட்டது. கூட்டமாவது கூட்டம். இன்னும் இரு தினங்கள் நடத்திப் பலர் கண்டு களிக்கச் செய்திருக்கலாம்!

# டாக்டர் பட்டங்களில் மோசடி தர்பார்கள்!

ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை என் நண்பர் ஒருவரைப் பார்க்கப் போயிருந்தேன். நண்பர் ஒரு கல்லூரியில் ரசாயனத் துறை உதவிப் பேராசிரியர். "என்ன சார், ஏதோ பி.எச்.டி. பட்டம் வாங்கப் போகிறேன். டாக்டர் ஸோ—அன்ட்—ஸோ என்று போட்டுக் கொள்ளப் போகிறேன் என்று வருஷக்கணக்காகச் சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்! எங்கே அந்த டாக்டர் பட்டம்?" என்று கேட்டு வைத்தாலும் வைத்தேன், ஏண்டாப்பா கேட்டோம் என்று ஆகிவிட்டது.

உற்சாகமாயிருந்த நண்பரின் முகம் உடைந்த பலூனாகிவிட்டது. 'அதை ஏன் கேட்கிறீர்கள்?" என்கிற மாதிரி.

"தீஸிஸ் (ஆராய்ச்சிக்கட்டுரை) சமர்ப்பித்தாகிவிட்டதா?"

"ஆகிவிட்டது — ஆகஸ்ட் 85ல்."

"அப்படியானால் டாக்டர் பட்டம் எப்போது கிடைக்கும்?"

"கடவுளுக்குத்தான் தெரியும்!"

நண்பரின் சோகத்தைக் குறைக்கிற மாதிரி, ஆதியோடு அந்தமாக, டாக்டர் பட்டம் வாங்கும் முறையைக் கேட்டுக் கொண்டேன். அத்தனையும் அப்படியே எழுதமுடியாவிட்டாலும் சுருக்கமாக இதோ:

பி. எச்.டி. ஆராய்ச்சிக் கட்டுரை எழுத உட்காரு முன்னால், நூறு ரூபாயைக் கொடுத்துப் பல்கலைக் கழகத்தில் பதிவு செய்து கொள்ள வேண்டும். 'இன்னாரை வழிகாட்டியாகக் கொண்டு தீஸிஸ் எழுத இருக்கிறேன்; என் கல்வித் தகுதி இது; பிரசுரமான என் பிற ஆராய்ச்சிக் கட்டுரைகள் இன்னின்ன; ஆராய்ச்சிக்கு இப்போது நான் எடுத்துக் கொண்டுள்ள விஷயம் இது' — என்பதை எல்லாம் குறிப்பிட வேண்டும். மேற்படி ஆராய்ச்சிக்கான உத்தரவு தர வேண்டும் என்று கல்லூரிக் கல்வி இயக்குநருக்குக் கடிதம் எழுதி மூன்று மாதங்களாவது காத்திருந்தால், 'ப்ரொவிஷனலி யூ ஆர் ரிஜிஸ்டர்ட்' என்று கடிதம் வரும்.....

நண்பரின் கதைக்கு வருவோம்.

அவர் பணியாற்றும் கல்லூரியிலேயே ஒரு பேராசிரியரை வழிகாட்டியாகக் கொண்டு, அவர் பி.எச்.டி. பட்டத்துக்கான ஆராய்ச்சிக் கட்டுரையைத் தயார் செய்யலாம்தான். ஆனால் நண்பரின் போதாத காலம், பேராசிரியர் பூனை என்றால், நண்பர் எலி. வேறு கல்லூரிப் பேராசிரியரை அணுகினார். "ஆகா!" என்றார் அவர். (வழிகாட்டியை கைடு அல்லது சூபர்வைசர் என்கிறார்கள்.) ஒரு வழிகாட்டியிடம் அதிகபட்சம் எட்டுப் பேர்தான் பி.எச்.டி. மாணவர்களாய் இருக்க முடியும். இதில் 6 பேர் முழு நேர மாணவர்கள்; 2 பேர் பகுதி நேர மாணவர்கள் — நண்பர் மாதிரி.

கைடு, டாக்டர் பட்டத்துக்கான விஷயங்களில், மாணவரின் துறையைப் பொறுத்து, எதைப் பற்றி எழுதலாம் என்று யோசனை கூறி உதவுவார். ஆலோசனைக் குழு அமைத்து, இரண்டு தேர்வுகள் வைப்பார். முதலில் எழுத்து மூலமான தேர்வு. அதில் தேறியவுடன் நேர்முகத் தேர்வு எனப்படும் 'வைவா வோஸ்!'. தகுதியானவர்தான் என்று இதன் பிறகே பல்கலைக் கழகத்துக்குச் சிபாரிசு செய்வார். முறையான பதிவு அப்புறம்தான். இதற்கு இன்னொரு மூன்று மாதம் ஆகிவிடும்! இதற்கு மேலும் ஆகலாம். நண்பர் 1979ல் பதிவு செய்தார். 81 கடைசி ஆகிவிட்டது, பதிவு அங்கீகரிக்கப்பட்டு, நண்பருக்குச் செய்தி கிடைக்க.

இது எல்லா பி.எச்.டி. ஆராய்ச்சிக் கட்டுரைகளுக்கும் பொருந்துமா?

அதுதான் இல்லை. 'தமிழில் விளம்பரங்கள்' என்று கையைச் சொடுக்குகிற நேரத்தில் ஒரு 'தீஸிஸ்' எழுதி, சமர்ப்பித்து ஓசைப் படாமல் டாக்டரேட் வாங்கிக் கொண்டு



• டாக்டர் அந்தோணி ராஜ்





போய்விடலாம். 'நடைபாதைக் கோயில்கள்' என்று ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை வெகு எளிதாக எழுதி, டாக்டர் பட்டம் வாங்கிவிடலாம். ஆனால் நண்பர் ரசாயனத் துறையில் பி.எச்.டி. பட்டம் வாங்க, பரிசோதனைகள், புதிதாகச் செய்தால்தான் உண்டு. அதற்குத் தேவையான கெமிகல்ஸ், உபகரணங்கள், சில விலையுயர்ந்த நூல்கள் இவை வாங்கியாக வேண்டும்.

''ரசாயனப் பரிசோதனைகளுக்கு மட்டும் 11000 ரூபாய் செலவழித்தேன்!'' என்றார் நண்பர். சில ரசாயனப் பொருள்களை வாங்க வெளிநாட்டுக்குத் தந்தி கொடுக்க வேண்டும். அவை விமானத் தபாலில் வந்து சேர வேண்டும்.... ஆராய்ச்சிக் கட்டுரைப் பிரதிகள் தயாரித்து, சமர்ப்பிக்க 4000 ரூபாய் ஆயிற்று.''

''இதற்குப் பல்கலைக் கழக மான்யக் குழு (யு.ஜி.ஸி.) எதுவும் உதவி செய்யாதா?''

''5000 ரூபாய் வரை கொடுப்பதற்கு அதிகாரம் உண்டு. ஆனால் அதற்கும் ஏகக் கால தாமதமாகும். அதனால் நான் அதற்குக் காத்திராமல், இந்தத் துறையில் என்னுடைய ஆர்வம் காரணமாக என் சொந்தப் பணத்தைச் செலவழித்தேன்.

நடுவில், எங்காவது மாற்றல் உத்தரவு வந்துவிட்டால், பகுதி நேர ஆராய்ச்சிப் படிப்பு அரோகரா! குறிப்பாக அரசாங்கக் கல்லூரி ஆசிரியர்கள் பாடு கேட்கவே வேண்டாம்....

ஆராய்ச்சிக் கட்டுரையை வெளிநாட்டுப் பேராசிரியர் ஒருவருக்கும், ஒரு பிரதியை வடக்கே இருக்கும் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் ஒரு பேராசிரியருக்கும் அனுப்புவார்களாம். இதில் வெளிநாட்டுக்கு அனுப்பப்படும் கட்டுரைப் பிரதியை விமானத் தபாலில் அனுப்பலாம் இல்லையா? கப்பலில் அனுப்புவார்களாம்! ''அது போய்ச் சேர ஆறு மாதம் ஆகிறது. நீயே இதன் விமான அஞ்சல் செலவை ஏற்க வேண்டும்!'' என்று மாணவரிடம் சொல்லிவிட்டால் அவரே அதையும் ஏற்றுக் கொள்ளுவாரே? செலவோடு செலவாக இதுவும் போகட்டும் என்றுவைத்துக்கொண்டால்,குறைந்தபட்சம் காலதாமதமாவது குறையுமே?

ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பிக்கப்படும் பொழுது 250 ரூபாய் செலுத்தியாக வேண்டும். பல்கலைக் கழகத்தின் சிண்டிகேட் சப் கமிட்டிக்குக் கட்டுரை போகிறபோது, 'ஆங்கிலத்தில் பிழை இருக்கிறது' என்று வேண்டுமென்றேகூட சிறிய பிழையைப் பெரிது படுத்தி, ஒரு வருடம் தள்ளிப் போடுவார்களாம். வழிகாட்டியிடம் கட்டுரையைக் கொடுக்கும்போது, அவர் பிழைகளைத் திருத்திக் கொடுத்தால் என்ன? பாவம், ஆராய்ச்சி மாணவர்தான் அவஸ்தைப்பட வேண்டும்.

''பழைய காலத்து குருகுலவாச முறையை விட மோசம் சார்! கைடு வீட்டு எலக்ட்ரிக் பில் கட்ட வேண்டும். ரேஷன் வாங்கிக் கொடுக்க வேண்டும். குழந்தைகளைப் பள்ளிக் கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டு விட்டு வர வேண்டும். தபாலாபீசுக்குப் போக வேண்டும். கறிகாய் வாங்கி வந்து கொடுக்க வேண்டும்..... இன்னும் ஏதாவது எடுபிடி வேலை பாக்கி இருந்தால் சேர்த்துக் கொள்ளுங்கள்!''

ஆனால் ஆராய்ச்சி மாணவரைத் தம் குடும்பத்தில் ஒருவராகக் கருதும் பேராசிரியர் — கைடுகளும் இல்லாமல் இல்லை. அ...

களிடத்தில் மாணவரே தாமாக முன்வந்து, மேற்படி வீட்டு வேலைகளைச் செய்து கொடுப்பதுண்டாம்.

எல்லாம் முடிந்து, மாணவரை ஒபன் வைவா வோஸ் எனப்படும் நேர்முகத் தேர்வுக்கு வரச் சொல்லுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது மாணவர், துறையில் சம்பந்தப்பட்ட ஐம்பது அல்லது நூறு பேரைப் பார்வையாளராக அழைத்தால், அத்தனை பேருக்கும் குறைந்தபட்சம் ஒரு டீயும் பிஸ்கட்டுமாவது கொடுக்க வேண்டாமா? செலவுதான்......

மாணவரின் ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்திருக்கும் வட இந்தியப் பல்கலைக் கழகத்துப் பேராசிரியருக்கு, அத்தனை தூரத்திலிருந்து வர பிரயாணப் படி கொடுக்க இயலாது என்று, பக்கத்து மாநிலத்தில் இருக்கும்பேராசிரியரை அழைப்பதுண்டாம். வைவா வோஸ் தேர்வுக்கு, அவர் மறுபடி இவரது ஆராய்ச்சிக் கட்டுரையை ஆதியோடந்தமாகப் படிக்க வேண்டும். அதற்கு இன்னொரு இரண்டு மாதம் ஆகிவிடும்! வைவா வோஸ் செய்யும் குழு, அன்றைக்கே தங்கள் முடிவை எழுதிவிடுவார்கள். அது பல்கலைக் கழகத்துக்குப் போகும். நல்ல தலையெழுத்து இருந்தால், ''யூ ஆர் அவார்டட் த டிகிரி ப்ரொவிஷனலி!' என்று கடிதம் வரும். எப்போது வரும்? சொல்ல முடியாது. அது வந்தால், அடுத்து வருகிற பட்டமளிப்பு விழாவில் டிகிரி வாங்கிக் கொள்ளலாம். இந்த நேர்முகத் தேர்வில் தேர்ச்சி பெறாவிட்டால், மூன்று மாதங்களுக்குள், இன்னொரு முறை தேர்வு செய்யக் கோரலாம். ஒரு மாணவர், ஆராய்ச்சிக்கட்டுரை எழுதி சமர்ப்பிக்கவோ, நேர்முகத் தேர்வில் தோன்றவோ இரண்டு தடவைகளுக்கு மேல் அனுமதிக்கப்பட மாட்டார்!

இந்த ஆராய்ச்சிக் கட்டுரை எட்டுப் பிரதிகள் எடுக்க வேண்டும். பல்கலைக் கழகத்துக்கு 5 பிரதிகள். கைடுக்கு ஒரு பிரதி. கல்லூரி நூலகத்துக்கு ஒன்று. மாணவருக்கு ஒரு பிரதி. சமர்ப்பித்த ஒரு வருடத்துக்குள் டாக்டரேட் கிடைத்துவிட்டால் மாணவர் அதிர்ஷ்டசாலிதான்.

''பெங்களூர் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் சயன்ஸில் இத்தனை பாடு இல்லை!'' என்றார் நண்பர். ''ஒரு கெமிகல் இல்லை என்றால் ஒரு கேபிள் கொடுத்து, பிளேனில் தருவித்துவிடலாம். அவ்வளவு வசதி..... இங்கே?''

(அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் டாக்டரேட் வாங்கிய நண்பர் ஒருவர் சொன்னார்: ''கைடு உங்களுக்கு உதவியாக இல்லை என்று தோன்றினால், நடுவிலே அவரிடமிருந்து பிரிந்து போய் வேறு ஒரு பேராசிரியரின் கீழ் உங்கள் பணியைத் தொடரலாம். இங்கே மாதிரி கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம். இன்னொரு விஷயம்: அங்கே நிறைய ஆராய்ச்சி நிதியுதவி நிறுவனங்கள் இருக்கின்றன. ஆராய்ச்சிக்கான முழுத் தொகையையும் அவர்களே கொடுத்துவிடுவார்கள். அயல் நாடுகளில் ஆராய்ச்சித் துறையும் தொழில் துறையும் இணைந்து செயல்படுகின்றன''.)

பெண்கள் பி.எச்.டி. பட்டம் வாங்குவதற்குள் வழிகாட்டியிடம் தொல்லைகள் பல அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்று கேள்விப்பட்டேன், உண்மையா?'' என்று நண்பரைக் கேட்டபோது, ''கைடு கொஞ்சம் கையை நீட்டுவார்.... தடவுவார்..... எல்லாம் பொறுத்துக் கொள்ள வேண்டும். இல்லை என்றால் பெண்மணிக்கு பி.எச்.டி. இந்த ஜென்மத்தில் கிடைக்காது!'' என்றார்.

ஆனால் இன்னொன்றையும் சொல்லியாக வேண்டும். 'நீங்கதான் சார் எனக்கு கைடு' என்று குழைந்து நெளிந்து, குலுக்கித் தளுக்கி, பேராசிரியரிடம் கொஞ்சும் குமரிகளும் உண்டு. ஆனைப்பட்ட விசுவாமித்திரரே மேனகையிடம் மயங்கியிருக்கிறார் சுவாமி!'' என்று சிரித்தார் நண்பர்.

இன்னொரு பி.எச்.டி. பெண்மணி சொன்னார்: ''சில கைடுகள் விஷயத்தில் அவர்கள் வெறும் பெயரளவுக்குத்தான். சந்தேகம் கேட்டால் விளக்கம் தரும் சாமர்த்தியம் கிடையாது.'நீயேதான் செய்யணும்..... நீயே பார்த்துக் கொள்' என்று விட்டேத்தியாகச் சொல்லிவிடுவார்கள்!''

முழு நேர ஆராய்ச்சி மாணவர் கதியும், பகுதி நேர மாணவர் கதியும் அப்படியொன்றும் பெரிதாக வித்தியாசமில்லை. பகுதி நேர மாணவர் குறைந்தபட்சம் 4 வருடங்களிலும், முழு நேர மாணவர் 3 வருடங்களிலும் தீஸிஸ் சமர்ப்பிக்கலாம். அதிகபட்சம் — முழு நேர மாணவர்க்கு 5 வருடம் என்றால் பகுதி நேர மாணவர்க்கு 6 வருடம்.

டாக்டர் பட்டம்வாங்கியவர்கள் சங்கம் ஒன்று இருப்பதைக் கேள்விப்பட்டு, அதன் செயலாளர் டாக்டர் அந்தோணி ராஜ் அவர்களைச் சந்தித்தேன். (இவர் ஃபேகல்டி இம்ப்ரூவ்மெண்ட் ப்ரொக்ராம் (FIP) முறையில் கான்பூர் ஐ.ஐ.டி.யில் கணிதத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர். (FIP) இந்த வருடத்திலிருந்து கிடையாதாம்!)

இந்தச் சங்கத்தில், தமிழ் நாட்டில் மட்டும் 250 பேர் உறுப்பினராய் இருக்கிறார்கள். 400 பேருக்குக் குறையாமல் டாக்டர் பட்டம் வாங்கியவர்கள் இருக்கிறார்கள். ''எங்களுக்குக்கட்சிப் பாகுபாடு கிடையாது. போராட்ட முறை எதுவும் கிடையாது. எல்லாம் பேச்சு வார்த்தை மூலம் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளுவோம்!''

''கைடு இல்லாமல் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிச் சமர்ப்பிக்கும் வழிமுறை ஏதும் இல்லையா?'' என்று கேட்டேன்.

''துறைத் தலைவர், பேராசிரியர், ரீடர், துணைப் பேராசிரியர், விரிவுரையாளர் என்றிவர்கள், பல்கலைக்கழகத்தின் பல்வேறு துறைகளிலோ, அல்லது பட்ட மேற்படிப்புக் கல்லூரிகளிலோ குறைந்தபட்சம் நாலு வருடங்களாவது போதித்த அனுபவம் இருந்தால், கைடு இல்லாமல் ஆராய்ச்சி செய்ய

# கல்கி விடுமுறை மலர் 1986




ஏராளமான வண்ணப்படங்கள், வண்ண ஓவியங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், நகைச்சுவை அம்சங்கள், சினிமா செய்திகள், பயணக் கட்டுரைகள், கவிதைகள், பாலர் பக்கங்கள் முதலிய சிறப்பு அம்சங்களைத் தாங்கி உருவாகி வருகிறது.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதவும்.

மே இரண்டாவது வாரக் கல்கி இதழுடன் எங்கும் கிடைக்கும்.

தனிப் பிரதி விலை ரூ. 10/–

ரிஜிஸ்தர் தபாலில் பெற தபால் செலவு ரூ. 4/– சேர்த்து அனுப்பவும்.

மானேஜர், கல்கி, சென்னை–600 032.

லாம் என்று இருக்கிறது!'' என்றவர் தொடர்ந்து, ''கைடு இல்லையானால் மாணவரின் ஆராய்ச்சிப் பணியைச் சரியான வழியில் தொடர்வது சாத்தியமில்லாமல் போகலாம்!'' என்றும் குறிப்பிட்டார்.

''டாக்டர் பட்டம் வழங்குவதில் ஜாதி வித்தியாசங்கள் குறுக்கே நிற்பதுண்டா?''

''அது எந்தத்துறையில்தான் இல்லை? லஞ்ச ஊழல் போல எல்லா இடங்களிலும் நீக்கமறப் பரவியிருப்பது அல்லவா, அது. இங்கேயும் சில பல சமயங்களில் திருவிளையாடல் புரியத்தான் செய்கிறது. அதைவிட அனைவருக்கும் பொதுவான பிரச்னைகளும் ஏராளமாக உள்ளன என்பதைக் கவனியுங்களேன்!''

''டாக்டர் பட்டம் வாங்கிய பிறகு என்ன கஷ்டம் உங்களுக்கு இருக்க முடியும், டாக்டர் அந்தோணி ராஜ்?''

''துணை வேந்தர்கள்தான் பல்கலைக்கழகங்களின் அகடமிக் ஹெட். அவர்கள் பல்கலைக்கழகப் பிரச்னைகளைப் பற்றித்தான் கவலைப்படுகிறார்களே தவிர, தமக்குக் கீழ் உள்ள கல்லூரிகளைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. உதாரணமாக, யு.ஜி.ஸி. சிபாரிசுப்படி, மெரிட் ப்ரமோஷன் ஸ்கீமில், எட்டு வருட அனுபவம் உள்ள கல்லூரி — பல்கலைக்கழகப் பேராசிரியர்களுக்குப் பதவி உயர்வு அளிக்க வேண்டும். பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரை செய்துவிட்டார்கள். கல்லூரிகளில் இன்னும் கவனிக்கப்படவே இல்லை. கல்லூரி ஆசிரியர்கள், தங்கள், கல்லூரிகளில் உபகரணங்களோ, பரிசோதனைக் கூடங்களோ தேவையான அளவுக்கு இல்லாமல் போய்விட்டால், பல்கலைக் கழகத்திலுள்ள பரிசோதனைக் கூடங்களை உபயோகிக்க அனுமதி கிடையாது!''

சமீபத்தில், டாக்டரேட் பட்டம் வாங்கியவர்கள் சங்கம் எடுத்துக்கொண்ட முயற்சியின் பேரில், மாதம் நூறு ரூபாய் சிறப்புச் சம்பளமாக, டாக்டர் பட்டம் வாங்கிய கல்லூரிப் பேராசிரியர்களுக்குக் கூடுதலாகக் கொடுக்கச் சொல்லி உத்தரவிட்டது அரசு. கூடவே ஒரு கட்டளையையும் சேர்த்தது! 'பி.எச்.டி. பட்டம் பெற்ற கல்லூரிப் பேராசிரியர்கள், ஆறு மாதத்துக்கு ஒருமுறை ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றைப் பிரகரிக்க வேண்டும்!'

''ஆராய்ச்சிக் கட்டுரை எழுதுவது என்பது அவ்வளவு லேசான விஷயமா? ஒரிஜினலாக ஆய்வு செய்தால்தான் அது ஆராய்ச்சியாக இருக்க முடியும். செய்து, ஆறு மாதத்துக்குள் முடியும் எப்படி தெரியும்? ஆராய்ச்சிகளுக்குக் கால வரையறை கிடையாது. அப்படியே கட்டுரை தயாரித்தாலும் எந்த சஞ்சிகையில் வெளியிடுவது? அதற்குத் தகுந்த ஆராய்ச்சி ஏடு இங்கே எங்கே வெளியாகிறது? சரி, அரசின் சார்பில் பல்கலைக் கழகமே ஆரம்பிக்கட்டுமே என்று கேட்டுக் கொண்டிருக்கிறோம்..... அப்படியே ஆறு மாதத்துக்கு ஒருமுறை 400 பி.எச்.டி. டாக்டர்களும் குறைந்தபட்சம் பத்துப் பக்கத்துக்கு ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினால் 4000 பக்கங்கள் ஆகிவிடுமே? ஒவ்வொரு ஆறு மாதத்துக்கும் யார் அதைப் பிரகரிப்பார்கள்? வெளிநாட்டு விஞ்ஞான ஆராய்ச்சி இதழ்களுக்கு அனுப்பினால், அதைப் பிரசுரம் செய்ய ஏற்றுக் கொள்வதற்கே 2, 3 வருடம் ஆகிவிடுகிறதே!'' என்றார் அந்தோணி ராஜ்.

(சம்பளத்தோடு சேர்த்துத் தரும் இந்த நூறு ரூபாய்கூட, ஆராய்ச்சிக் கட்டுரை தயாரிக்கும் அடிப்படைச் செலவுக்கும் விமானத் தபால் கட்டணத்துக்குமே சரியாகப் போய் விடுகிறதாம்.)

''நீங்கள் ஐ.ஐ.டி.யில் புரொபசரிடம் பி.எச்.டி. செய்தீர்களே? இங்கே உள்ளதற்கும் அங்கே நீங்கள் செய்த முறைக்கும் ஏதாவது வேறுபாடு உண்டா?''

''அதிகமாக இல்லை. ஆனால் இங்கே இருப்பதைவிட அங்கே வசதிகள் அதிகம் எனலாம். அங்கே கம்ப்யூட்டர் வசதி இருப்பதால், இன்னும் எளிதாக இருக்கிறது. என்னுடைய தீஸிஸ் பேப்பரை இரண்டு வெளிநாட்டுப் பேராசிரியர்களுக்கு அனுப்பி, அவர்களுடைய மதிப்பீடுகள் வந்து சேர்ந்துவிட்டன. தில்லியிலுள்ள பேராசிரியரிடமிருந்து மட்டும் வரவே இல்லை. ரிமைண்டர் மேல் ரிமைண்டர் போட்டார்கள். எப்படி இருக்கிறது நம் நாட்டுப் பேராசிரியர்கள் மனப்போக்கு!''

''கைடுக்கும் மாணவர் அல்லது மாணவிக்கும் இடையே உறவு எப்படி இருக்க வேண்டும்?''

''வெகு சுமுகமாக இருக்க வேண்டும். இல்லை என்றால் பாதியில் விட்டுவிட்டுப் போக வேண்டியதுதான்! சில வேளை கைடு சொல்லுவது சரியாக இருக்காது. மாணவனுக்கும் தெரியும். இருந்தாலும் அவரைத் தட்டிக் கேட்க முடியாது. கேட்டால் தொல்லைதான். 'நீ எழுதியது சரியில்லை. மாற்றி எழுத வேண்டும்!' என்று வேண்டுமென்றே சொல்லுவார் கைடு. ஆரம்பத்திலிருந்து மறுபடி மாற்றி எழுத வேண்டியதுதான். இப்படியும் சில கேசுகள் உண்டு.....''

புகழ் பெற்ற இன்னொரு சென்னைக் கல்லூரியில், உதவிப் பேராசிரியர் கணிதத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர். ஆனால் இந்த உதவிப் பேராசிரியரிடம் பி.எச்.டி. பட்டம் பெற மாணவர்களை அனுமதிக்கும் பொறுப்பு, டாக்டர் பட்டம் பெறாத துறைத் தலைவருக்குத்தான் இருக்கிறது! அக்கறையே இல்லாத மாணவரை அவரிடம் அனுப்புவார். உதவிப் பேராசிரியர் போராடி பார்த்தார். சம்பளமின்றி விடுமுறை எடுத்தார். கடைசியில் வேறு வழியின்றி விட்டுக் கொடுத்தார்.

இங்கே டாக்டர் பட்டம் வாங்கிவிட்டு வெளிநாடு போய் வேலை பெறவோ மேற்கொண்டு ஆராய்ச்சி பண்ணவோ முடியுமா?

அரசுப் பணியில் உள்ள ஆசிரியர், வெளிநாடு போகுமுன் பத்திரம் ஒன்று எழுதிக்

## வாசகர் கருத்து

## சொர்க்கத்தின் கதவுகள்



* உலகியலை உணர்த்தும் நடை — யதார்த்தத்தை வெளிப்படுத்திய மாருதியின் ஓவியம் — நாமே இந்த கதாபாத்திரங்களுக்குள் ஐக்கியமாகி கொள்ளும் உயிர்ப்பு — ஆக மொத்தத்தில் 'லக்ஷ்மி'யின் 'சொர்க்கத்தின் கதவுகள்' என்னால் திரும்பத் திரும்ப ஆவலுடன் தட்டப்பட்டது.

—போடி ரவிராஜ், மதுரை.

* பிள்ளைகளைப் பெற்றால் போதாது; பொறுப்போடும், பாசத்தோடும் வளர்த்து ஆளாக்க வேண்டும் என்பதைக் கதாசிரியை லக்ஷ்மி சொர்க்கத்தின் கதவுகள் மூலம் உஷ்ணமாகவே படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

—ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்.

* 'சொர்க்கத்தின் கதவுகள்' என்ற தலைப்பைப் படித்ததுமே ஒரு புனித ஆன்மா சென்று உறையப் போகிறது என்று உணர்ந்தோம். ஆசிரியை அவர்கள் விமலாவின் மூலமாகப் பெண்—பெண்மை, பெண்ணின் கடமை, பெருமை எது என்பதை மிகச் சுருக்கமாக அதே நேரத்தில் ஆழமாக விளக்கம் தந்த பாங்கு அவருக்கே உரிய தனி கலை.

—காமாட்சி சத்திய நாராயணன், வேலூர்—12.

* அருமையான ஒரு யதார்த்தப் படைப்பு — லக்ஷ்மியின் சொர்க்கத்தின் கதவுகள். விமலா எங்கள் இதயக் கதவுகளைப் பிளந்து உள்ளே புகுந்து ஆக்ரமித்துக் கொண்டுவிட்டாள்.

—ஆர். அரிகோபி, குடியாத்தம் (வ.ஆ.)

* கதையின் இறுதியில் என்னைக் கண்கலங்க வைத்துவிட்டார் லக்ஷ்மி.

—சித்ராதேவி, ஈரோடு.

---

கொடுத்தாக வேண்டும் — திரும்பி வந்து இந்த அரசிலேயே உழைப்பேன் என்று. இது வேறுவிதமான கொத்தடிமை போலிருக்கிறது!

இங்கே சென்னையிலிருக்கும் ஒரு ரசாயனப் பேராசிரியரை, அவரது ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்துவிட்டு, அமெரிக்காவிலுள்ள நோபல் பரிசு பெற்ற உலகப் புகழ் விஞ்ஞானி ஒருவர் கூப்பிட்டார். இங்கே அரசு அவரை அனுப்ப மறுத்துவிட்டது. அவர் அங்கே போய் ஆராய்ச்சிகளைத் தொடர்ந்திருந்தால், ஒருவேளை நோபல் பரிசுகூட தமிழ்நாட்டுப் பேராசிரியர் ஒருவருக்குக் கிடைத்திருக்கக் கூடும்!

''சமுதாயத்துக்குப் பயன்படும் பி.எச்.டி. ஆராய்ச்சிகளில் பேராசிரியர்கள் இறங்க வேண்டும் என்று கல்வியமைச்சர் அரங்கநாயகம் சொல்லியிருக்கிறாரே?''

''ஐம்பது சதவிகிதம் நேரடியாகப் பயன்படலாம். மீதி நாங்கள் செய்யும் ஆராய்ச்சிகளின் அடிப்படைக் கருத்தை ஆதாரமாகக் கொண்டு மேலும் தொடர்ந்தால், அதன் பலன் சமுதாய நோக்கத்துக்காக அமையும். பேஸிக் ரீஸர்ச்சிலிருந்து நிறைய ஐடியாக்கள் கிடைக்கும். சில ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தலைப்புகளைப் படிக்கிறேன். இவை சமுதாயத்துக்குப் பயன்படும் விதத்தில் அமைந்தவைதான் என்பது உங்களுக்கே புரியும்'' என்ற டாக்டர் அந்தோணி ராஜ், சக டாக்டர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளின் சில தலைப்புகளைக் கொடுத்தார்:

1. தமிழ்நாட்டில் தொழில்துறை மாறுதல்கள்.
2. குடிசை வாழ் மக்களின் சமூக, பொருளாதார நிலைமை.
3. கொல்லிமலையில் பயிராகும் நெற்பயிருக்கான நைட்ரஜன்.
4. பெர்ட்ரண்ட்ரஸலும் பெரியார் ஈ.வே.ரா.வும்.
5. கூவம் ஆற்றின் தூய்மையின்மை.
6. உரங்களில் ரசாயனத்தின் பங்கு.

'சிலர், ஒரு வரிகூட சொந்தமாக ஆராய்ச்சிக் கட்டுரை எழுதாமலே டாக்டர் பட்டம் வாங்கிவிடுகிறார்களாமே?' என்று விசாரித்ததில் —

அப்படியும் சில டாக்டர்கள் உண்டாம்! கைடு பாவம் மண்டையை உடைத்துக் கொண்டு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிக் கொடுத்துவிடுவாராம். மாணவர் களுவில் டாக்டர் பட்டம் தட்டிக் கொண்டு போய் விடுவாராம்! இதைவிடச் சுலபம் ஒரு முயற்சியும் எடுக்காமல் உலகப் பல்கலைக் கழகத்தின் மூலம் டாக்டர் பட்டம் பெற்றுவிடுவது! தபாலில் கூட வந்து சேரும்! உளு உளுவாக் கட்டிக்கு விளையாட்டாக வழங்கப்படும் இந்த டாக்டர் பட்டத்துக்கு ஒரு மதிப்பும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்ளாமல் நமது அரசியல்வாதிகள் சிலரும் எழுத்தாளர்கள் பலரும் தங்கள் லெட்டர் ஹெட்டில் டாக்டர் பட்டத்தைப் பெயருக்கு முன் சேர்த்துக்கொள்வதைப் பார்த்தால் சிரிப்புத்தான் பொத்துக் கொண்டு வருகிறது!

பேட்டி, கட்டுரை: **சாருகேசி.**

அட்டைப் படத்தில் **ராஜ்குமார், பத்மினி துரைராஜ், ஆர். ராஜன்.**

வண்ணப்படம்: **யோகா.**



# பதில் சொல்வாள் பத்ரகாளி

ரொம்ப காலம் காத்திருந்து ஏங்கிய பிறகு பிறக்கப் போகும் குழந்தைக்காக ஜெய்சங்கர் எதிர்பார்ப்புடன் இருக்க, பிரசவ வேதனையால் மனைவி துடிக்க, மனைவிக்குக் காவலாய் மந்திரவாதி நண்பனை வைத்து விட்டு, மருத்துவச்சி வீட்டிற்குப் போய்த் திரும்பி வந்து பார்த்தால், மந்திரவாதி நண்பனும் சரி, பிறந்த குழந்தையும் சரி அந்தர்த்யானம்! காரணம் புரியாமல் நண்பனைப் பழி வாங்க ஜெய்சங்கர் திமிறுவது ஒரு பக்கம். காணமல் போன குழந்தைக்காக பத்ரகாளியிடம் முறையிடும் கே.ஆர். விஜயா ஒரு பக்கம். இந்தத் தலைச்சன் குழந்தையைப் பலி கொடுப்பதற்காக முயற்சிகள் எடுக்கும் ஜடாதர செந்தமாரை ஒரு பக்கம். அப்புறம் அந்தக் கங்காதேவி, அவளுடைய ஜமீன்தார் தந்தையாக வரும் ஜெய்கணேஷ் ஆகியோரின் கிளைக் கதை ஒரு பக்கம்.

இந்தக் கதையை அதில் கோர்த்து, அந்தக் கதையை இதில் பின்னி, என்று ஏகப்பட்ட பின்னல்கள் இருந்தாலும் கொஞ்சமாவது குழப்பம் வரவேண்டுமே! ஊஹூம். சீரான திரைக்கதை விஷயத்திற்காகவே டைரக்டரை மனமாரப் பாராட்டலாம்.

அப்புறம் மற்றவர்கள். கே. ஆர். விஜயா முகத்தில் கரி பூசியிருக்கிறார்கள், படத்தில்! இருந்தாலும் அதுவும் ஒரு அழகாகத்தான் தோன்றுகிறது. ஜெய்சங்கர் கே. ஆர். விஜயா தான் நாயக நாயகியர். அந்தத் தலைமுறை ஆசாமிகள்! கொடுத்த வேலையில் குறை வைக்கவில்லை.

செந்தாமரை, ராஜீவ், ஜீவிதா, ஜெய்கணேஷ் என்று மற்றொரு நட்சத்திர ஊர்வலம். ஸோ, ஸோ.

பத்ரகாளியாக வரும் விஜிக்கு செம வேடப் பொருத்தம். அதுவும் அந்த இரண்டு கோரைப் பற்களுடன் வருவதைப் பார்த்தால் இனி மேல் இவர் இந்த மாதிரி வேடங்களையே தரிக்கலாமே என்ற ஆசை வருகிறது. பேச வசனமும் இல்லையா? வெகு பொருத்தம்.

'முத்துத் தமிழெடுத்து' பாடல், 'அஷ்ட திக்கு' பாடல் இரண்டும் சென்னை வானொலியின் காலை நேர அமுத கான நிகழ்ச்சிக்கு ஏற்றவை. மற்றப் பாடல்களையும் குறை சொல்வதற்கில்லை.

சேர்த்தாக வேண்டுமே என்று சேர்க்கப் பட்ட செந்தில். அந்தக் காமெடியைப் பார்க்கும் போது கிச்சு கிச்சு மூட்டப்படுவது போல் தோன்றினாலும் 'சீப்' காமெடிதான்.

அதெல்லாம் போகட்டும் —

ஒரு பக்திப் படத்தை இரண்டு மணி நேரம் பார்க்கும்படி செய்திருப்பதே பெரிசு.

## (Amity Ville)

பேய், பிசாசு, பூதங்கள் ஆங்கிலப் படங்களையும் பிடித்து ஆட்டுவதை அவ்வப்போது பார்த்துவிட்டோம். சொல்லப் போனால் ஓமன் போன்ற ஆங்கிலப் படங்கள் காரணமாகத்தானே இங்கே அவற்றுக்குப் புது மவுசு ஏற்பட்டது!

எடுத்துக் கொண்ட கதை எப்படி, படமாக்கப்பட்டுள்ள விதம் எப்படி என்று பார்க்கும்போது அமிதிவில்லியில் மலிவான பூச்சாண்டி வித்தைகள் நிறைய.

துஷ்டச் செய்கைகள் மிகுந்த சில பேய்கள் ஆக்ரமித்துள்ள ஓர் ஒதுக்குப்புறமான அநாதரவான வீடு. பேயாவது பிசாசாவது என்று கெக்கலிக்கும் ஓர் எழுத்தாளர் அமைதியான அந்த வீட்டை விலைக்கு வாங்கித் தம் மனைவி, வளர்ந்த மகள் இருவருடனும் குடியேறுகிறார். அவருடைய அழகான சகா காரில் நெருப்புப் பிடித்து அம்பேல். இனிய மகள் படகில் போனவள் உயிரோடு திரும்பவில்லை. போதாததற்கு வீட்டில் அவ்வப்போது யாரோ நடமாடும் சப்தம் எட்செட்ரா....

ஒரு வழியாய் குடி வந்தவர்களை பேய்கள் வீட்டை விட்டு எப்படி வெளியேற்றுகின்றன என்பது குழப்பமான ஒரு க்ளைமாக்ஸ்.

இரைச்சலான பின்னணி சங்கீதம். நேர்த்திக் குறைவான திரைக்கதை அமைப்பு.

படத்தைப் பற்றி 'பயமா, பரிகாசமா' என்று பட்டிமன்றம் நடத்தினால் இரண்டாவது அணியினருக்குத்தான் ஏகோபித்த கை தட்டல்கள் கிடைக்கும்!

— ஜெயமன்மதன்.

# அமிதி வில்லி

# அடுத்த இதழில்...

**தஞ்சை மாவட்டத்தில் கல்வி — !**

* "நல்ல தண்ணீருக்கே
5 கி. மீ. நடக்கணும்..."

— கவர் ஸ்டோரி



"எங்கள் கிராமத்து இளைஞர்களுக்குப் பெண் கொடுக்கவே பயப்படுகிறார்கள்.."

— ஓர் ஊரின் அவலக் கதை.

* பயந்து பயந்து வாழும்
பத்து கிராமத்து மக்கள்!

— ஸ்பெஷல் ரிப்போர்ட்.





"மேனேஜர் கிட்ட வசமா மாட்டிக்கிட்டேன். அர்ஜெண்ட் ஃபைல் பார்க்கறதை விட்டுட்டுக் கதைப் புஸ்தகம் படிச்சுக்கிட்டிருக்கிறதைப் பார்த்துத் தொலைச்சுட்டார். இப்ப எப்படிச் சமாளிக்கிறது?"



"சார்! வந்து.... அது வந்து.... 'ஆபீஸ் வேலையை ஒழுங்காய்ச் செய்வதெப்படி?' ங்கற புஸ்தகத்தைப் படிச்சிக்கிட்டிருக்கேன்...."



"உன்னை யார் படிக்க வேண்டான்னுங்க? இந்தா. என் மனைவி எழுதின இந்தக் கதையைப் ஃபேர் காபி பண்ணிக் கொடுத்துட்டு அப்புறமா படி....."

மருமகள்: அத்தை, நீங்க பண்றது கொஞ்சம்கூட நல்லாயில்லை.

மாமியார்: என்ன சொல்றே?

மருமகள்: என் கணவர் ஒருவரே சமையல் வேலை அனைத்தும் செய்கிறார். உங்க கணவர் கூடமாட ஒத்தாசை செய்யக் கூடாதா?

— ஸ்மைபன்.



"பிச்சை வாங்கிக்கிட்டுப் போக வழக்கமா ஒரு பழைய அலுமினியப் பாத்திரத்தைத் தானே கொண்டு வருவே. இன்னைக்குப் புது ஸ்டீல் பாத்திரத்தைக் கொண்டு வந்திருக்கியே, ஏது?"

"ஃபேன் வாங்கினேன் தாயே, இதை இலவசமாக் கொடுத்தாங்க!"



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani.

Editor: K. Rajendran.

உங்கள் பார்வை-
எமது புதிய சர்வதேச சூட்டிங்குகள் மீது!



பாலியெஸ்டர் வூல்/ஓர்ஸ்டெட் மற்றும் பாலியெஸ்டர் ப்ளெண்டட் சூட்டிங்குகள்

சேஸாரி
கலெக்‌ஷனின் சூட்டிங்ஸ்

**பாம்பே டையிங்**

REGISTERED No. [illegible]
Registered as a Newspaper in [illegible]




# பிலிப்ஸ்

## கேட்டீர்களா முற்றும் புதியது ?

பிலிப்ஸ் டூ-இன்-ஒன்களின்
வெகு நேர்த்தியான ஒலி இன்பம்.
ஸ்டீரியோ மற்றும் மோனோ.
எழிலோங்கும் வடிவம், கண்கவர் டிசைன்,
இவற்றின் விசாலமான அணிவகுப்பு.
ஒலித்திறனிலும்
இயங்குவதிலும் சர்வதேசத்
தரத்தை வழங்குபவை.
இவற்றுக்கும் பின்பலமாக நாடெங்கும்
பரவலாக உள்ள ஸர்விஸ் வசதி.





D8334 ரூ.3400/-*



D8248 ரூ.3150/-*



AR538 ரூ.2200/-*



AR448 ரூ.1800/-*



AR343 ரூ.1450/-*



AR243 ரூ.1300/-*



AR153 ரூ.1196/-**



AR151 ரூ.1095/-**



AR143 ரூ.1025/-*

## நாங்கள் வழங்குபவை தேர்வுக்குச் சிறந்தவை.

*எக்ஸைஸ் வரி உட்பட. தல வரிகள் தனி. லைஸென்ஸ் தேவை இல்லை.

CLARION B/P/126/193 TAL

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**